உங்கள் கேசம் அடர்த்தியின்றி
சக்தியின்றி இருக்கிறதா? உங்கள்
கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும்
ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...



## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**




HES. G. 4. TH

# மசாலா!



''மாமியார் மருமகன் சண்டையில் தலையிடாமல் இருந்தது ரொம்பத் தப்பாப் போச்சு.''

''ஏன் என்ன ஆச்சு? பெரிய கலாட்டாவா?''

''அப்படியொன்றுமில்லே. ரெண்டு பேரும் கோவிச்சுக்கிட்டுச் சினிமா பார்க்கக் கிளம்பியதிலே என் பாக்கெட்டைக் காலி பண்ணிட்டாங்க!''

—கமல தியாகராஜன்

டில்லி ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கலந்துகொள்ளத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாரத விளையாட்டு வீரர்களின் மனோதிடத்தை வலுப்படுத்த கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய 'விளையாட்டுத் துறை உளவியல்' நிபுணரான குர்த் ஏ. க்ருகர் என்பவர் 'தினமும் சம்ஸ்கிருத மந்திரங்களை உச்சாடனம் செய்து தியானம் செய்ய வேண்டும்' என்று நம்து விளையாட்டு வீரர்களுக்கு ஆலோசனை கூறியுள்ளார். இதற்கான சம்ஸ்கிருத மந்திரங்களையும் அவர் கற்றுத் தந்தார்.

—வசந்தா மகாதேவன்
(ஆதாரம்: தினமணி)

எஸ். ஜானகி ஒரு பின்னணிப் பாடகி மட்டுமல்ல. நல்ல கவிஞரும் கூட. தெலுங்கில் ஒரு பாடல் இயற்றியிருக்கிறார். அந்தப் பாடல் மிகவும் 'ஹிட்' டாகி விட்டது. அதை ரசித்த தமிழ்ப் படத் தயாரிப்பாளர் ஒருவர் அந்தப் பாடலைத் தமிழாக்கம் செய்திருக்கிறார். தமிழ்ப் படத்தில் அந்தப் பாடலை பாடுபவர் யார் தெரியுமா? சிலுக்கு ஸ்மிதா!

தகவல்: ப. உத்தண்டராமன்

## வீட்டு வாடகை குறைகிறது!

திருச்சி அரியமங்கலம் அருகே உள்ள அம்பிகாபுரத்தில் பல வீடுகளில்கோடை காலத்தில் கிணற்றில் தண்ணீர் வற்றி விடும். இத்தகைய சமயங்களில் ஆள் வைத்து வெகு தூரத்திலிருந்து தண்ணீர் எடுத்து வந்து குடித்து, கை கழுவப் பயன்படுத்த வேண்டியுள்ளது. ஆகவே கோடை மாதங்களில் இப் பகுதியில் உள்ள சில வீடுகளின் சொந்தக்காரர் வாடகையைப் பத்து ரூபாய் முதல் 20 ரூபாய்வரை குறைத்து வாங்கிக் கொள்கிறார்கள்! தண்ணீரில்லாவிடினும் ஈர நெஞ்சாவது இருக்கிறதே!

—ராஜி ராதா



சென்னை மே. மாம்பலத்தைச்சேர்ந்த எஸ். மோகன், என். ஏழுமலை, எம். இப்ராஹிம், கே. பாபு, பி. சேகர், நரசிம்மன், விஸ்வநாதன் ஆகிய நண்பர்கள் சிலுக்கு நடித்த சினிமாவைப் பார்ப்பதில்லை என்று சபதம் பூண்டுள்ளனர்!

தகவல்: கே. சங்கர்

''ஆபீஸிலிருந்து வீட்டுக்குக் கிளம்பும் போது கான்டீனிலே போய் டீ குடிக்கிறயே ஏன்?''

''தூக்கக் கலக்கத்தோடு வீட்டுக்குப் போனா பெண்டாட்டி திட்டுவா!''

—பாதுஷா



# காந்தி
# மெய்சிலிர்க்கும் அனுபவம்

மூன்றரை மணி நேரம் ஓடும் காந்தி திரைப்படம் ஓர் அற்புத அனுபவம். அட்டன்பரோவும் மற்றவர்களும் நுணுக்கமாக ஆராய்ந்து சிறப்பாக எடுத்துள்ள இப்படத்தில் ஆரம்ப முதல் முடிவு வரை விறுவிறுப்பு இருக்கிறது.

ஜனவரி 30 அன்று காந்தி சுடப்பட்டு இறந்த காட்சியிலிருந்து ஆரம்பமாகி அதே காட்சியுடன் படம் முடிகிறது.

ஆப்ரிக்காவில் வழக்கறிஞராக இருக்கும் காட்சி ஒரு கவர்ச்சியுள்ள காந்தியாக இருக்கிறார். பின்னால் ஒரு நாட்டையே தம் தலைமையின் கீழ் கொணரப் போகிறவர் என்பது அந்த காந்தியின் நடை, உடை, பேச்சு, குறும்புப் பார்வை, புன்சிரிப்பு எல்லாவற்றிலும் தெரிகிறது. (பென் கிங்க்ஸ்லி காந்தியாகவே மாறி யிருக்கிறார்.)

ஆப்பிரிக்காவில் ஜோஹனஸ்பர்க்கில் தடியடிபட்டுக் கொண்டே வெள்ளை அரசாங்கம் தந்த பாஸ்களை எரிக்கும் காட்சி உருக்க வைக்கிறது. அடிபட்டுக் கொண்டே நெருப்பில் காந்தி போடுவதைக் காணும் அதிகாரிகளும் அடிக்கும் வேகத்தைத் தங்களை அறியாமலேயே குறைத்துக் கொள்கிறார்கள்.

மிகை எதுவுமில்லாத நடிப்பு. அந்தக் காட்சியிலிருந்து நம் மனத்தில் காந்தி ஒரு மகாத்மாவாகப் பரிணமித்துப் போகப் போக விசுவரூபம் எடுக்கிறார்.

காந்தி இந்தியா திரும்புகிறார். 60—70 வருஷங்களுக்கு முந்தைய பம்பாய் துறைமுகத்தைப் படத்தில் கொண்டு வந்திருக்கிறார்கள்.

படத்தில் பல காட்சிகளில் 'கூட்டங்கள்' இடம் பெற்று இருக்கின்றன. எப்படி இத்தனை திரட்டி ஒழுங்குபடுத்தி ரிகர்சல் செய்து பிசிறு இல்லாமல் எடுத்தார்கள் என்பது வியப்பாக உள்ளது. உதாரணம்: உப்பு சத்தியாக்கிரகக் காட்சிகள். மகாத்மா காந்தியின் டிரேட் மார்க் நடையான வேகம் கலந்த நடையை, பரபரப்பை, தீவிரத்தை, துணிவை அபாரமாகக் கொண்டு வந்துள்ளார் பென். இந்தக் காட்சிகளைப் பார்க்கும்போது நமது சுதந்திரப் போராட்ட உணர்வுகள் நம்மை ஆக்கிரமித்துக் கொள்கின்றன. எத்தனை எத்தனை பேர் சுதந்திரம் கிடைக்குமா என்று தெரியாது அந்த நாளில் எத்தனை தியாகம் செய்துள்ளனர்!

சபர்மதி ஆசிரமக் காட்சிகளும் பிரிவினையின்போது மக்கள் சாரை சாரையாகப் போவதும் திடீரென்று அவர்களுக்குள் மோதல் ஏற்படுவதும் மகாத்மா காந்தியின் உண்ணாவிரதக் காட்சிகளும், நடிக்க வைக்கப்பட்டு எடுத்த காட்சிகளாகவே தெரியவில்லை. மிகவும் தத்ரூபமாக எடுத்திருக்கிறார்கள்,

கஸ்தூரிபா காந்தியின் கடைசி காலமும், அவரது படுக்கையருகில் மகாத்மா அமர்ந்து பணிவிடை செய்வதும் கடைசியில் மகாத்மா கண்ணீர் விடுவதும் நெகிழ்ச்சி ஏற்படுத்துகின்றன.

நேருவாக ரோஷன் சேத் நடித்துள்ளார். கூடியவரை நேருவை நம் முன் கொண்டு வந்திருக்கிறார்.

ஜின்னா, படேல், திலக் முதலியவர்களாக வருபவர்களின் நடிப்பு பென் கிங்க்ஸ்லியின் நடிப்புக்கு முன்பு எடுபடவில்லை.

மோகன்தாஸ் கரம் சந்திர என்பவரின் சரிதமாக ஆரம்பித்து மகாத்மா காந்தியின் கதையாகப் படம் முடிகிறது. இதுவே இப்படத்தின் சிறப்பு. எந்த இடத்திலும் மிகை இல்லை.

இந்தப் படத்தில் ஒரே குறை: படத்தில் ஆரம்ப காட்சியில் காந்தியைக் கொன்ற கோட்ஸேயின் முகம் தான் இடம் பெற்றிருக்கிறது!

இது ஒரு 'கதர்' படம். தமிழ் நாட்டு 'சில்க்' ரசிகர்கள் எப்படி வரவேற்பார்களோ தெரியாது!

—பி. எஸ். ஆர்.

- பென் கிங்க்ஸ்லி ஒரு நாடக நடிகர். இவர் குஜராத் மாநிலத்தில் பிறந்தவர். இப்போது பி. பி. ஸி. ஒரு நாடகத் தொடரில் நடிக்க இருக்கிறார். ஒரு காமாந்தகாரனாகவும் ரௌடியாகவும் உள்ள கதாபாத்திரம். எட்மண்ட் கீன் என்ற ஷேக்ஸ்பியர் நாடக நடிகரின் வாழ்க்கை வரலாறு இது. பி.பி.ஸி.யில் மார்ச் மாதம் ஒலிபரப்பாகிறது.
- படம் ஆங்கிலத்தில் எடுக்கப்பட்டுள்ளது. இந்தி பதிப்பு 'டப்' செய்யப்பட்டுள்ளது. டப்பிங் அவ்வளவு சிறப்பாக இல்லை. ஆங்கிலப் படத்தில் உள்ள துடிப்பான வசனம் இந்தியில் இல்லை.
- காந்தி படத்தில் ஒரே ஒரு காட்சியில் தான் குட்டி கவுன் போட்ட 'இந்திரா காந்தி' வருகிறார்.
- ராஜாஜி, அம்பேத்கார், நேதாஜி முதலிய பலர் இல்லவே இல்லை.
- அமெரிக்கப் பத்திரிகையாளர் வாக்கராக இதில் நடிக்கும் மார்ட்டின் ஷீன், தமக்கு அளிக்கப்பட்ட ஊதியம் முழுவதையும் மதர் தெரிஸாவுக்கு நன்கொடையாகக் கொடுத்து விட்டார்.



# கோபுரம் தாங்கும் பொம்மைகள்



நடுவில் சில நாட்களாக டல்லடித்துக் கொண்டிருந்த தமிழ் நாடக மேடைக்குத் தற்போது என்னவோ நல்ல காலம் பிறந்திருக்கிறது. போலும்.

வலுவான கதை: போதுமான அளவு சீரியஸ் காட்சிகள்: காட்சிக்குக் காட்சி தேவையான அளவு (அண்டர்லைன்: தேவையான) நகைச்சுவை; கைதட்டல்களைப் பெறும், முகம் சுளிக்க வைக்காத வசனம்; இயல்பான — ஓவர் ஆக்ட் செய்யாத நடிகர்கள்; டைரக்டர் என்றும் ஒருவர் நாடகத்தில் உண்டு என்பதை பார்வையாளர் உணர்தல் — ஆஹா, இப்படி எல்லாம் சேர்ந்த நாடகம் ஒன்று இருக்க முடியுமா என்று நினைத்துக் கொண்டிருந்த போது நாடகமித்ராவின் 'கோபுரம் தாங்கும் பொம்மை'களைப் பார்க்க நேர்ந்தது. (டைரக்ஷன் மாலி).

இதுவும் தன்னை ஒரேயடியாக நம்பும் மனைவியை ஏமாற்றும் கணவனின் கதைதான். (கல்கியில் 'நீயும் வந்துவிடு' என்ற சிறப்புச் சிறு கதைதான் 'கோபுரம் தாங்கும் பொம்மைகளாக நாடக வடிவம் பெற்றிருக்கிறது)

ஆகவே கதைக்கு ஏற்கனவே ஒரு சிறப்பு முத்திரை இருக்கிறபொழுது வசனமும் இயற்கையாகவே சபாஷ் போடுகிற வகையைச் சேர்ந்து விட்டது! அப்புறம் என்ன, கொலு பொம்மைகளாக வராமல், ஜான்சி ராணி, லலிதா, மோகன், முரளி, நாடகாசிரியர் சௌந்தரியன், சுந்தரராஜன், கணேஷ். குழந்தைகள் கார்த்திக், சுதா எல்லாரும் கோபுரத்தைத் தாங்குகிற பொம்மைகளாக வந்து சக்கைப் போடு போடுகிறார்கள்.

சுந்தரி பாய்? அவரைக் கோபுரம் என்றே சொல்லிவிடலாம். அத்தனை இயற்கை! என்ன குழைவு, என்ன குத்தல்! இவர் வருகிற அத்தனை சீன்களும் கலகலப்பு என்றால் நாடகத்தின் வெற்றிக்கு இவரது கணிசமான பங்கு துல்லியமாகத் தெரியும்.

சௌந்தரியன் மாதிரி நாடகாசிரியர்களும், மாலி மாதிரி நாடக இயக்குனர்களும் வந்துவிட்டால் சபா நாடகங்கள் கூட தரத்தில் உயர்ந்துவிடும் என்று நம்பிக்கை பிறக்கிறது.

-சாருகேசி








**கல்கி நடத்தும் பாரதி விழா**

**சுந்தரம் கிளேட்டன் வழங்கும்**
**டி. வி. எஸ்.-50 மொபெட்**
**பரிசளிப்பு விழா**

**நிகழ்ச்சி நிரல்**

இறை வணக்கம்

வரவேற்புரை:
**திரு. கி. ராஜேந்திரன்,**
ஆசிரியர், கல்கி

தலைமையுரை:
**திரு. ம. பொ. சிவஞானம்,**
சட்டமன்ற மேலவைத் தலைவர்

டி. வி.எஸ்.-50 மொபெட் பரிசளிப்பு:
வழங்குபவர்:
**திரு. வேணு சீனிவாசன்,**
மானேஜிங் டைரக்டர், சுந்தரம் கிளேட்டன்.

பெறுபவர்:
**திரு. அ. குமார்,**
பெங்களூர்.

பாரதி விழா சிறப்பு சொற்பொழிவுகள்:
**திருமதி சௌந்தரா கைலாசம்**
**திரு. அவ்வை நடராசன்**
**திரு. மீ. ப. சோமு**
**திரு. குமரி அனந்தன்**

நன்றியுரை:
**திரு. அழ. வள்ளியப்பா,**
கௌரவ ஆசிரியர், கோகுலம்

இடம்:
**ஏ.வி.எம். ராஜேஸ்வரி கல்யாண மண்டபம்**
**மயிலை, சென்னை**

தேதி, நேரம்:
**15.3.83 செவ்வாய்க்கிழமை மாலை 6-30**

அனைவரும் வருக!



# 'காந்தி'யைப் பார்த்தவரும் யைப் பார்க்காதவரும் பார்க்கிறார்கள்!

**காந்திஜியுடன் பேசிப் பழகியவர் திரு என். எஸ். வரதாச்சாரி. காந்தி சகாப்தத்துக்குப் பிறகு பிறந்து வளர்ந்தவர் சாந்தி. இருவரும் 'காந்தி' திரைப்படம் பார்த்துவிட்டு உரையாடுகிறார்கள்.**

சாந்தி: ரெண்டு விஷயங்களுக்காக நான் ரொம்பப் பெருமைப்படறேன். ஒண்ணு காந்திஜி படத்தைப் பார்க்க முடிஞ்சதே அதுவே ஒரு பெரிய பாக்கியம். ரெண்டாவது காந்திஜியோட வாழ்ந்த உங்களோட பேசச் சந்தர்ப்பம் கிடைச்சதே அது. ஏன்னா திருப்பதிக்குப் போய் வந்தவங்களைப் பார்த்தாலே புண்ணியம்பாங்க.....

வரதாச்சாரியார்: நீ ரொம்ப உணர்ச்சி வசப்படறே அம்மா. காந்திஜி ஒரு மலை. நாங்கள்ளாம் மடு. இந்தப் படத்தைப் பார்க்கும்போதே பல்வேறு நினைவுகள் வந்தன. நான் முதன் முதல்ல காந்தியைப் பார்த்தது, அவரோட ஆசிரமத்திலே தங்கியிருந்தது. இப்படி ஒவ்வொண்ணு...

சாந்தி: சொல்லுங்களேன்! முதமுதல்ல நீங்க காந்தியை எப்பப் பார்த்தீங்க?

வரதா: 1920ம் ஆண்டுன்னு நினைக்கிறேன். முதன் முதலாக அப்பத்தான் சென்னைக்கு வரார். வக்கீல்கள் கூட்டத்தில் அவர் பேசும்பொழுது யாரும் கோர்ட்டுக்குப் போய் வாதாடக் கூடாதுன்னு சொன்னார். அடுத்த நாளே இரு சந்தானம், சுப்ரமண்யம், ராமநாதன், நான் நாலு பேரும் காந்தியைச் சந்தித்தோம். தென் இந்தியாவிலேயே பகிரங்கமா பொதுக்கூட்டத்திலே வக்கீல் பிராக்டீஸ் பண்ணப் போறதில்லேன்னு முதன் முதலாக அறிவித்தது நாங்க நாலு பேர்தான். சரி, படத்துக்கு வருவோம். இது ஒரு மறக்க முடியாத காவியம். காந்திஜியோட பேசி, நெருங்கிப் பழகிய எனக்கே காந்திஜியையே திரையில் பார்க்கிறோம் என்ற உணர்வு ஏற்பட்டது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! அந்த அளவுக்கு மிக தத்ரூபமாக பென் கிங்ஸ்லீ நடித்துள்ளார். அவருடைய வேகமான நடை, உட்காரும் அழகு, ராட்டை சுற்றும் நிலை எல்லாமே காந்திஜியை அப்படியே உரித்து வைத்திருக்கிறது.

சாந்தி: நீங்க காந்திஜியைப் பார்த்தவங்க. ஆனா நானு! புஸ்தகங்கள்ளேயும், புகைப் படத்திலேயும் மட்டும் பார்த்தவ. உங்களைப் போலவே நானும் மெய் மறந்து ரசிச்சேன். அப்படின்னு சொன்னா மிகையே அல்ல. பென் கிங்ஸ்லீயோட நடிப்பு மட்டுமல்ல, காட்சிகளின் அமைப்பு, அதைப் படமாக்கின விதம் எல்லாமே மனசை ரொம்பத் தொட்டுடுத்து. குறிப்பா அந்நியத் துணிகளை நாம அணியக் கூடாது அப்படீன்னு சொல்லி, அதை எரிக்கிற காட்சி இருக்கே என்னாலே மறக்கவே முடியாது.

வரதா: மக்கள் எல்லாரும் ஏழைகளா, உடுத்தறதுக்குத் துணிகூட இல்லாத நிலையிலே நான் மட்டும் எப்படிப் பல்வேறு வகை





யான உடைகளைப் போடறது அப்படீன்னு காந்திஜி முடிவு பண்ணி இடுப்பிலே ஒரு வேஷ்டி மட்டும் அணியத் தொடங்கினார். அதைப் படத்திலே ரொம்பச் சிறப்பாகக் காட்டியிருக்காங்க. அந்த நாளிலேயிருந்து நானும் மேலே சட்டை போடறதில்லே.

சாந்தி: உண்ணாவிரதக் காட்சி ரொம்ப உருக்கமா இருந்துச்சு. மகான்களின் உண்ணாவிரதத்துக்குத் தனி மரியாதை உண்டுன்னு புரியுது.

வரதா: தேசத் தந்தை உண்ணாவிரதம் இருக்கார்னா தேசமே இருக்காதா? படத்துலே சுதந்திரம் வாது. இந்தியாவும் பாகிஸ்தானும் பிரியும்போது இந்துக்களும் முஸ்லிம்களும் சண்டையிட்டுக் கொள்றாங்க. விளைவு காந்திஜி சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கார். நான் அவர் உண்ணாவிரதம் தொடங்கி, சில நாட்களில் அவரைப் பார்க்கப் போனேன். டாக்டர் அன்சாரி வீட்டில் தான் அவர் தங்கியிருந்தார். நான் போன நாளன்று அவருடைய நாடித் துடிப்பு பலஹீனமா இருந்தது. நாங்கள்ளாம் ரொம்பப் பயந்தோம். ஆனா அவர் தைரியமா ''நான் பொழச்சுடுவேன். கவலைப்படாதீங்க'' அப்படீன்னார். அதே மாதிரி அவர் பொழச்சுட்டார். கண்ணிலே நீர் ததும்பற விதமா அதைப் படமாக்கி யிருக்காங்க. எனக்கு ஒரே ஒரு குறைதான். ராஜாஜி, ஷங்கர்லால் பாங்கர் போன்றவங்களையும் காட்டியிருக்கலாம்.

சாந்தி: இது காந்திஜிக்காக எடுக்கப்பட்ட படம். மத்தவங்க அவ்வளவா முக்கியமல்லை. அதனாலதான் இப்படி இருக்கோ என்னவோ!

வரதா: ஒண்ணு மட்டும் நிச்சயம். காந்தி தென்னாப்பிரிக்காவிலே இருந்தபொழுது தமிழர்கள்தான் அதிகமா உதவிசெஞ்சிருக்காங்க. துணையாயிருந்தாங்க. இதை அவரே சொல்லியிருக்கார். தென்னிந்தியாவுக்கு வரதுன்னா அவர் ரொம்ப சந்தோஷப்படுவார். ஷங்கர்லால் பேங்கர் மற்ற எல்லாரையும் விட காந்திஜிக்கு ரொம்ப நெருக்கமானவர். போகட்டும். இவையெல்லாம் சின்னக்குறைகள். சிறப்பான அம்சங்களை நினைச்சுப் பார்ப்போமே! காந்திஜியோட தத்துவங்களைத் துல்லியமாகப் படம் பிடித்திருக்கிறார்கள். மேலும் அவரோட நேரம் தவறாமை, காலை மாலை பிரார்த்தனைகள் இதெல்லாம் ஒண்ணு விடாம யோசிச்சுச் சேர்த்திருக்காங்க.

சாந்தி: உப்பு சத்தியாக்கிரகமும் சரி, ஜாலியன்வாலாபாக் படுகொலையும் சரி, படத்தில் பார்க்கிறவங்க யாரும் அழாம இருக்க முடியாது. படத்தைப் பார்க்கிறவங்களுக்கே இப்படீன்னா அந்தக் காலத்திலேயே வாழ்ந்த உங்களுக்கு எப்படி இருந்தது?

வரதா: அப்பல்லாம் சுதந்திர தாகமும், எப்படியாவது சுதந்திரம் அடைஞ்சுடணும்னு ஒரு வெறியும் இருந்தது. அந்தக் காலத்தை அப்படியே கண் முன்னாடி இந்தப் படத்திலே நிறுத்தி யிருக்காங்க. வெள்ளைக்காரன் நம்ம நாட்டை ஆண்ட தப்புக்கு ஒரு நல்ல பிராயச்சித்தம் செய்திருக்கான், இந்தப் படத்தின் மூலமா! காந்திஜி ரொம்ப வேடிக்கையாப் பேசுவார். நாளைக்குச் செய்யலாம் அப்படீன்னு எதையுமே ஒத்திப் போட மாட்டார். தன்னைப் பின்பற்றுபவர்களை அவரைப் போல அன்பா அரவணைக்கிறவங்க வேற யாருமே இடையாது. அதே போல் தன்னை எதிர்த்தவங்க மேலேயும் பாசத்தைப் பொழிவார். இவை எல்லாவற்றையுமே இந்தப் படத்திலே பிரமாதமா வெளிப்படுத்தியிருக்காங்க.

சாந்தி: நேருஜி, கோகலே, சர்தார் பட்டேல் இப்படி ஒவ்வொருத்தரையும் முடிந்த வரைக்கும் சிறப்பாக் காமிச்சிருக்காங்க. ரவி சங்கரோட இசை அமைப்பு இந்தப் படத்துக்கு ஒரு பிளஸ் பாயிண்ட்.

வரதா: ரொம்ப சரி, ஆமோதிக்கிறேன். லாலா லஜபதி ராய் காந்திஜியை முதன் முதலில் சந்தித்ததை நான் கண்ணாலே பார்த்தேன். காந்திஜி லஜபத் ராயை ஆரத் தழுவிண்டு 'பஞ்சாப் கா கேசரி' அப்படீன்னாரு. லஜபதி ராய் பதிலுக்கு 'பாரத் கா கேசரி' அப்படீன்னு காந்திஜியை வாழ்த்தினார். கேசரின்னா சிங்கம்னு அர்த்தம். நாமும் இந்தப்படத்தைப் பார்த்துவிட்டு ரிச்சர்ட் அட்டென்பரோவை ''சினிமா கா கேசரி''ன்னு வர்ணிக்கலாம்னு தோணறது!

உரையாடல் தொகுப்பு: சலன்
மேலட்டை, புகைப்படங்கள் உதவி:
த.மு.ரா



கிர் காட்டில் சிங்கம்

"கைடா காலிங்!... ஓவர்...." — இப்படி வயர்லெஸ் செய்தி ஒலிக்கிறது! இதென்ன போலீஸ் தலைமையகமா? இல்லை! இல்லை! ஆனந்திலுள்ள தலைமை கால்நடை மருத்துவ நிலையம் கைடா மாவட்டத்தில் உள்ள நான்கு முக்கிய பகுதிகளோடு தொடர்பு கொண்டு கிராமங்களுக்குக் கால் நடை மருத்துவர்களை உடனே அனுப்பி வைக்கிறது. பதினெட்டு ஜீப் வண்டிகளில் வயர்லெஸ் தொடர்பு இருப்பதால் கால்நடை மருத்துவர்கள் எந்தப் பகுதியில் இருந்தாலும் அடுத்தடுத்த கிராமங்களில் கால்நடைகளுக்கு ஏற்படும் வியாதிகளைப் பற்றித் தகவல் தெரிந்து கொண்டு உடனுக்குடன் நடவடிக்கை எடுக்கமுடிகிறது. இருபத்தி நான்கு மணி நேர எமர்ஜன்ஸி சேவை. இதற்கு அந்த கைடா மாவட்டத்திலுள்ள விவசாயி அங்கத்தினர் செலுத்த வேண்டிய பணம் ரூபாய் பதினைந்துதான்!

• • •

கிராமப்புற நிர்வாகத் திறமை பெறுவதற்குப் பட்டதாரிகளுக்குப் பயிற்சி அளிப்பது Institute of Rural Management ஆனந்தில் 1979ம் வருஷம் தொடங்கப்பட்ட இர்மா (IRMA) இந்தியாவில் முதல் தடவையாகக் கிராமப்புற நிர்வாகத்துக்கென உருவான தொழில் கல்வி நிலையம். இந்தப் படிப்புக்கு முதல் வருஷம் ஆகும் செலவு ரூ. 5950. தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களுக்கு தேசிய பால் வள போர்டு மாதம் அறுநூறு ரூபாய் உபகாரச் சம்பளம் வழங்கும். கிராமப்புறங்களுக்கு நேரில் சென்று ஆய்வு நடத்த 1800 ரூபாய் வழங்கப்படும். இந்த உபகாரத் தொகை பெறும் மாணவர்கள் மூன்று வருஷம் தேசிய பால் வள போர்டு குறிப்பிடும் ஸ்தாபனத்தில் பணி புரிவதாகச் சான்றிதழ் எழுதித் தர வேண்டும்.

# "சிங்கநாதம் கேட்குது!"



• • •

"குஜராத் மாநிலத்தைத் தமிழர்கள் தான் ஆளுகிறார்கள். குஜராத் சர்க்காரில் கிட்டத்தட்ட ஏழெட்டுக்காரியதரிசிகள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள்! குஜராத்தில் குடியேறும் தமிழர்கள் குஜராத்திப் பெண்களை மணந்து கொண்டு விடுகிறார்கள். சாமர்த்

அசையும் ஸ்தூபிகள்

நிய சாலிகள்! நான் திராவிடன். சாளுக்கிய பரம்பரையைச் சேர்ந்தவன்!'' என்கிறார் குஜராத் முதன் மந்திரி மாதவ் சிங் சோளங்கி.

முதன் மந்திரியின் தந்தை ஏழை: நில மற்றவர்: தொழிலாளி. உழைப்பால் உயர்ந்த மாதவ் சிங் சோளங்கி பிரசித்தமான வக்கீல்: ஜர்னலிஸ்ட் கூட!

காந்திஜிக்கு அந்தக் காலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் 'ராஜத் துரோகம்' என்று கூறி ஆறு வருஷம் சிறைத் தண்டனை அளித்த கட்டடத்தில் இன்று முதன் மந்திரி திரு சோளங்கி தமிழகப் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு விருந்து அளித்து, ''தமிழர்களாயிற்றே. இவர்களுக்கு இட்லி, தோசை என்றால் ரொம்பப் பிரியம்! குஜராத்தில் இவர்களுக்கு இட்லி தோசை கிடைக்க வழி செய்யுங்கள்'' என்று குஜராத் பத்திரிகைத் தொடர்பு அதிகாரிகளுக்குச் சொன்னார். தமிழக முதன் மந்திரியின் சத்துணவுத் திட்டம் பற்றி ஆராயக் குஜராத்திலிருந்து ஒரு குழுவை அனுப்புமாறு தமது செயலாளர் திரு ராமமூர்த்திக்குத் தெரிவித்தார். எளிமையும் இனிமையும் மிக்க திரு சோளங்கி அனைவரோடும் அளவளாவும் விதம் அவர் 'பாபுலராக' இருப்பதற்கான காரணத்தை உணர்த்துகிறது.

● ● ●

அஹமத் ஷா சபர்மதி நதிக் கரையில் தண்டு இறங்கியிருந்தபோது முயல்கள் வேட்டை நாய்களையும் எதிர்த்து நிற்கும் அதிசயத்தைக் கண்டார். இங்கே ஒரு நகரை நிர்மாணிக்க மன்னருக்கு முஸ்லிம் சன்யாசி 'அஹமத் காட்டு' யோசனை தெரிவித்தார். அஹமதாபாத் நகரம் 1411ல் நிர்மாணிக்கப்பட்டது!

அஹமதாபாத்தில் அசையும் ஸ்தூபிகள் (Shaking Minarets) சரித்திரகால இன்ஜினியரிங் கலைச் சிறப்புக்கு எடுத்துக்காட்டு. இந்த அசைந்தாடும் ஸ்தூபத்தில் ஒன்றை



○ சோமநாதர் ஆலயம்

இடித்து அதன் இன்ஜினியரிங் தன்மையை அறிய முயன்றிருக்கிறார்கள், பிரிட்டிஷ் இன்ஜினியர்கள். இப்படிச் செய்தும் அவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை!

அண்ணலின் நினைவைப் போற்றும் காந்தி நகர் 1960ம் வருஷம் பம்பாய் ராஜ்யம் மகாராஷ்டிரம்-குஜராத்தாகப் பிரிந்தபோது 5500 ஹெக்டேர் நிலப்பரப்பில் உருவான புதிய நகரம். பூங்காக்களும், மரங்களும் இந்தத் தலைநகருக்கு அழகூட்டுகின்றன. நவீன முறையில் உருவான சட்டசபை மண்டபம் நம்மை அயர வைக்கிறது. குஜராத்தில் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு நிறைய செல்வாக்கு உண்டு. மந்திரிகளையும் முதன் மந்திரியையும் வாரத்தில் ஒரு முறை சந்திப்பதோடு, டெலிபோனிலேயே பேசி விவரங்களைச் சேகரித்து விடுவார்களாம்! பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கென்று தனிக் காலனி இருப்பது இனிப்பான செய்தி.

● ● ●

சபர்மதி நதிக் கரையில் காந்தி ஆசிரமம். 'வைஷ்ணவோ ஜனதோ' ஒலிக்கிறது. தண்டி யாத்திரைக்கு அண்ணல் புறப்பட்டது இந்த ஆசிரமத்திலிருந்துதான். அயல் நாட்டுப் பிரமுகர்களை வரவேற்கும் அறையில் காந்திஜி பயன்படுத்திய மேஜை, திண்டு

○ தமிழகப் பத்திரிகைப் பிரதிநிதிகளுடன் குஜராத் முதல்வர் மாதவ்சிங் சோளங்கி



கைக்கடிகாரம் அப்படியே கண்காட்சியாக வைக்கப்பட்டிருக்கின்றன. அன்னை கஸ்தூரிபா பயன்படுத்திய பை அலமாரியில் காட்சி தருகிறது. காந்தி ஒலி ஒளிக் காட்சி தினம் மாலை ஆறு மணியிலிருந்து நடக்கிறது.

போர்பந்தரில் காந்திஜி பிறந்த இல்லத்துக்கு விஜயம் செய்கிறோம். அவர் பிறந்த இடத்தைத் தொட்டுக் கண்ணில் ஒற்றி மகிழ்கிறோம்.

ராஜ்கோட்டில் காந்திஜி ஆல்பிரட் உயர்நிலைப் பள்ளியில் பயின்றிருக்கிறார். காந்திஜி பரீட்சையில் தேறிய விடைத் தாள்கள் பொக்கிஷங்களாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

ராஜ்கோட்டில் காந்திஜி வசித்த இல்லத்தை காந்தி மியூசியமாக்கி, அவரது வாழ்க்கைப் படங்களைக் கண்காட்சியாக வைத்திருக்கிறார்கள். மது, மங்கை, மாமிசம் தவிர்க்குமாறு காந்திஜியிடம் அவரது அன்னை பிரதிக்ஞை வாங்கிக் கொண்டது இந்த இல்லத்தில்தான்.

அண்ணலுக்குப் பிடித்தமான மதுவிலக்கு அமுலில் உள்ள மாநிலம் குஜராத்.

• • •

சத்தியத்தின் சங்கநாதம் கேட்ட இடத்திலிருந்து புறப்பட்டுச் சிங்கநாதம் ஒலிக்கும் இடத்துக்குப் போகிறோம்.



கிர் காட்டுக்குள் செல்வதற்காகப் பஸ் தயாராகக் காத்திருந்தது.

''கிர் காட்டில் உள்ள சிங்கங்கள் வெளி வந்து கால்நடைகளுக்குச் சேதம் விளைவித்திருக்கின்றன. இதுவரை மூன்று லட்சம் ரூபாய் நஷ்ட ஈடு கொடுத்திருக்கிறோம்!'' என்றார் காட்டிலாகா அதிகாரி லக்ஷ்மிநாராயண். நாம் இரையானால் நம் குடும்பத்துக்கு என்ன கிடைக்கும் என்று பயத்தில் மனம் கணக்குப் போட்டுப் பார்த்தது.

எருமைக் கன்றுக்குட்டி பாவம்! நடு நடுங்கச் சிங்கங்களுக்கு மத்தியில் அதை நிற்க வைத்துக் கையில் துப்பாக்கியுடன் ஒரு காட்டிலாகா சிப்பந்தி காவல் நிற்கிறார். எப்பொழுது இந்த இரை அவற்றுக்குக் கிடைக்கும் என்று சிங்கங்கள் வளைய வந்தன.

''ஏன் ஸார், லக்ஷ்மி நாராயண்! இந்தச் சிங்கங்கள் காட்டிலாகா சிப்பந்திகளை ஒன்றும் செய்யாதா? ரொம்பவும் நெருங்கிப் போய் நிற்கிறார்களே!'' என்று திகைப்புடன் வினவுகிறோம்.

''காக்கிச் சட்டைக்கு எப்பவுமே ஒரு மதிப்பு உண்டு சார்! இந்தச் சிங்கங்கள் குட்டிகளாக இருந்தபோதிலிருந்தே இந்தச் சிப்பந்திகளோடு பழகி வருவதால் இது வரை எந்தத் தீங்கும் செய்ததில்லை! மேலும் சிங்கம் இரவில் நன்கு இரை உண்டுவிடுவதால் பகலில் ஓய்வு எடுத்துக் கொள்கின்றன. இரவு ஆறரை மணிக்கு மேல் காட்டைவிட்டு நாங்கள் விலகிச் சென்று விடுவோம்!''

கிர் காடுகளில் இருநூறுக்கு மேற்பட்ட ஆண், பெண் சிங்கங்களும் சிங்கக் குட்டிகளும் வாழ்கின்றன. பதினைந்து மீட்டர் தூரத்தில் நின்று சிங்கங்களைப் பார்வையிடலாம். சிங்கக் கண்காட்சிக்குச் சென்ற வருஷத்தில் 27,870 பேர் வந்திருக்கிறார்கள். ஒருவருக்குப் பஸ் கட்டணம் ஐந்து ரூபாயும் அனுமதிக் கட்டணம் இரண்டு ரூபாயும் வசூலிக்கிறார்கள்!

• • •

நிலவுக் கடவுள் சோமாவைச் சிவன் கோபத்தில் சபித்து விடவே, சிவபெருமானின் சீற்றத்தைத் தணிக்கக் கடற்கரையில் சோமநாதர் ஆலயம் எழுப்பினான் நிலவுக் கடவுள் சோமா. இந்தியாவிலுள்ள 12 புனித ஜோதிர் லிங்கங்களில் ஒன்று சோமநாதர் ஆலயத்தில் உள்ளது. தங்கம், வெள்ளி இழைத்து உருவான சோமநாதர் ஆலயத்தை முஸ்லிம் அரசர்கள் கொள்ளையடித்துப் போக முயன்றிருக்கிறார்கள். பத்திரமாகச் சிவலிங்கத்தை ஒளித்து வைத்துப் பிறகு இடித்த கோவிலைத் திரும்பக் கட்டியிருக்கிறார்கள்! இந்தச் சோமநாதர் ஆலயத்துக்கருகிலுள்ள கடலிலிருந்து வட துருவத்துக்கு எந்தத் தேசத்தின் மண்ணையும் தொடாமல் கப்பல் பிரயாணம் செய்யலாம் என்று ஒரு ஸ்தூபியில் பொறித்து வைக்கப் பட்டிருக்கிறது.

—பி. எஸ். எம்.

கல்கி



1983 மார்ச் 13
துந்துபி மாசி 29
மலர் : 41 இதழ் : 33



# பாரதப் புரட்சி!

"வருவாய் அதிகரிப்பதற்கு ஏற்பச்செலவும் கூடிவிடுகிறது என்பது பார்க்கின்ஸன் எழுதிவைத்த இரண்டாவது விதி. இதை நாம் எல்லாருமே உணர்ந்து வருகிறோம். குடும்பத்துக்குக் கூறுவது அரசுக்கும் பொருந்தும். ஆனால் ஒரு வித்தியாசம். அரசு தன் வருவாய் என்ன என்பது பற்றி யோசிப்பதில்லை. செலவினங்களை முதலில் வகுத்துக் கொண்டு அதற்கேற்ப வருவாய் தேடுகிறது. குடும்பத் தலைவர்களோ வருவாயைக் கணக்கிட்டுச் செலவை நிர்ணயிக்கிறார்கள். குடும்பங்கள் செய்வது போல் அரசாங்கமும் நடந்துகொள்ள ஆரம்பித்தால் பொருளாதாரத் துறையில் அந்நாடு ஒரு புரட்சி செய்ததாக இருக்கும்."

இவ்வாறு எழுதிய பார்க்கின்ஸனுக்குத் தெரியாது — பாரத தேசமும் புரட்சி செய்துதான் இருக்கிறது. இரட்டைப் புரட்சி! வரவுக்கு மேல் செலவை மிக அதிகமாகத் திட்டமிடுவதில் பாரதத்தை மிஞ்ச வேறு ஒரு நாடு இருக்க முடியாது. அதன் பிறகு புதிய வரிகளையும் கட்டண உயர்வுகளையும், விலை உயர்வுகளையும் அறிவித்து மக்களைக் கசக்கிப் பிழிவதிலும் பாரத அரசுக்கு இணையாக உலகில் வேறு எந்த நாடுமே கிடையாது.

நடப்பு ஆண்டில் பற்றுக்குறை 1500 கோடி என்று சென்ற பட்ஜெட் சமர்ப்பித்தபோது மதிப்பிட்டார் நிதி அமைச்சர். ஆனால் அது 1935 கோடியாக உயர்ந்துள்ளது! இந்த பட்ஜெட்டில் அடுத்த 83—84ம் பற்றுக்குறையை 1555 கோடியாகக் குறைத்துவிடலாம் என்று மதிப்பீடு செய்துள்ளார். ஆனால் உண்மையில் இது 2000 கோடி பற்றுக்குறையாக முடிந்தால் வியப்பதற்கில்லை. இதற்காக நாஸிக் அச்சுக்கூடம் இரவு பகல் வேலை செய்து நோட்டுக்களை அச்சடித்துத் தள்ளும்போது பணவீக்கமும் விலைவாசி உயர்வும் மக்களை வறுத்தெடுக்கின்றன. ரூபாயின் மதிப்பு அதள பாதாளத்துக்குச் சரிந்து சில பைசாக்களுக்குச் சமானமாகிறது.

போதாக் குறைக்கு எல்லாரையும் திடுக்கிடச் செய்யும் அளவுக்கு 716 கோடிக்குப் புதிய வரிகள் விதித்திருக்கிறார் முகர்ஜி. 'இந்த வரிகள் பெரும் செல்வந்தர்கள், அல்லது தொழில் வர்த்தக நிறுவனங்களைத்தான் பாதிக்கும்: மத்தியதர, அடித்தள மக்களுக்குப் பல வரிச் சலுகைகள் அளித்துள்ளேன்' என்கிறார் நிதி அமைச்சர். இது வெறும் ஏமாற்று. ஓர் இயந்திரத்தின் மீது இறக்குமதி வரி உயர்த்தினால் அது

















உற்பத்தி செய்யும் பொருளின் விலை கூடும். சிமெண்ட் மீது வரி உயர்த்தினால் வீட்டு வாடகை உயரும். சொந்தத்தில் ஒரு ஃபிளாட் வாங்க ஆசையோடு இரண்டு லட்சம் சேமிக்கத் திட்டமிடும் குடும்பம் இனி மூன்று லட்சம் சேமிக்க வேண்டியிருக்கும். ஆக, பண்டங்களை வாங்கிப் பயன்படுத்தும் சராசரி மனிதன்தான் விலைவாசி உயர்வு என்ற ரூபத்தில் அத்தனை வரிகளையும் கொடுத்து அழுகிறான். சாமானியருக்கும் நடுத்தர வர்க்கத்தினருக்கும் காண்பிக்கப்பட்டுள்ள சில வரிச் சலுகைகளை விடவும் இந்த விலைவாசி உயர்வால் அவர்கள் படப்போகிற அவதி மிக அதிகம்.

உற்பத்தியை அதிகரிக்க வேண்டிய தொழிலகங்களுக்குக் காண்பிக்கப்பட்டுள்ள சில சலுகைகள் அவற்றை ஊக்குவிக்கப் போதுமானவையல்ல. வலது தோளில் உள்ள சுமையை இறக்கி இடது தோளில் புதுச் சுமைகளை ஏற்றுவது போல் ஏதோ செய்திருக்கிறார் முகர்ஜி, அவ்வளவே.

அண்மையில்தான் அறிவிக்கப்பட்ட ரயில்வே கட்டண உயர்வும்: டீசல்-கெரசின் விலை உயர்வும்: தபால் கட்டண உயர்வும் ஆண்டொன்றுக்கு 2100 கோடியை முன்னிலும் அதிகமாக மக்களிடமிருந்து கறக்கப் போகின்றன. அத்துடன் இந்த 716 கோடி புதிய வரிகளையும் கூட்டிப் பார்த்தால் பட்ஜெட்டின் அசுரத் தன்மை புரியும்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| கவிதையில் வடிமுறை | கா. மயூராஜா | | |
| தமிழ் மாண்பு | கவிஞர் செவ்வேள் | 4 | 50 |
| கல்கியின் சிவகாமியின் சபதம் (நாடகக் காவியம்) | புத்தனேரி சுப்பிரமணியம் | 5 | 00 |
| வடியாத வெள்ளங்கள் (கவிதைகள்) | —கவிஞர் வல்லம் வேங்கடபதி | 11 | 00 |
| கண்ணதாசன் கவிதைகள் VII | —கண்ணதாசன் | 17 | 00 |
| சந்தித்தேன் சிந்தித்தேன் | ,, | 12 | 00 |
| ஏசு காவியம் | ,, | 25 | 00 |
| கம்பன் காவ்யம் அன்றும்—இன்றும்—என்றும் | பி. ஸ்ரீ. டாக்டர் சரசுவதி ராமநாதன் | 6 | 00 |
| மணமுள்ள மலர்களிலே மருத்துவம் | —சம்பந்தம் | 5 | 00 |
| வளரும் வானதி (வானதி திருநாவுக்கரசு வாழ்க்கை வரலாறு) | —கௌசிகன் | 3 | 00 |
| உலகம் சுற்றும் குழந்தைகள் | —வாண்டுமாமா | 7 | 00 |
| அவசியமான 600 மருத்துவக் குறிப்புகள் | —சம்பந்தம் | 8 | 00 |
| பாரதி போற்றிய பன்னரும் உபநிடத நூல் | —தி. சா. ராஜு | 7 | 00 |
| புதுவையில் பாரதியார் | —புலவர் மு.த. வேலாயுதனார் | 8 | 00 |
| வாழ்க்கை வெற்றி பரிகாரம் | —பால ஜோசியர் | 18 | 50 |
| மாணவர்களும் கல்வித் துறைகளும் | —ஜோதிடக் கணிப்பு — பால ஜோசியர் | 6 | 00 |
| சுவையான கனிகளிலே மருத்துவம் | —சம்பந்தம் | 6 | 00 |
| குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா வரலாறு | —டாக்டர் பூவண்ணன் | 15 | 00 |
| பொய்க்கால் குதிரைகள் (புதுக் கவிதைகள்) | —வாலி | 10 | 00 |
| இருமொழி இலக்கிய இன்பம் | ஸ்ரீ ராமதேசிகன் | 8 | 00 |
| இந்தியாவின் கலையும் கலாசாரமும் | —சௌரி | 9 | 00 |

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி. பி. பி.யில் பெற எங்களுக்கு கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக வி. பி. பி.யில் அனுப்பி வைக்கிறோம். பணத்தைக் கொடுத்து தபால்காரரிடம் வி. பி. தபால் செலவுடன் புத்தக பாக்கெட்டைப் பெற்றுக் கொள்ளுங்கள். வானதியின் ஆயிரக் கணக்கான தமிழ் நூல்களுக்கான இலவசப் பட்டியலுக்கு எழுதுங்கள்.

விவரங்களுக்கு

# வானதி பதிப்பகம்

(தி. நகர் தலைமைத் தபால் நிலையம் எதிரில்)

**13, தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை-600017**

போன் : 442810

# கைராசி டாக்டர்

## ராஜேஷ்குமார்

**மா**ருதி க்ளினிக்.

இருபதாம் நம்பர் அறை.

கட்டிலில் கிழிந்த நாராய்ப் படுத்திருந்த குழந்தை சித்ரா மெல்ல முனகினாள். அருகில் அமர்ந்தபடி குழந்தையைப் பார்த்துக்கொண்டிருந்த சியாமளிக்கு வயிற்றைப் பிசைந்தது. இதயம் 'பக் பக்' என்று அடித்துக்கொள்ள ஆரம்பித்தது.

சரியாய் ஒரு வாரத்துக்கு முன்பு—குழந்தை சித்ராவைக் காய்ச்சலுக்காக இந்த க்ளினிக்கில் அட்மிட் செய்து விதம்விதமாய் மருந்துகள் ஊசிகள் எல்லாம் கொடுத்தும் இன்று வரை இந்த நிமிஷம் வரை எந்த முன்னேற்றமும் இல்லை. காய்ச்சல் விடாப்பிடியாக இறங்க மறுத்துக் குழந்தையை அலைக்கழித்துக்கொண்டிருந்தது.

குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்த சியாமளா முன் நடுத்தர வயதில் பெண்ணொருத்தி நின்று கொண்டிருந்தாள்.

''யாருங்க? என்ன வேணும்?''

அந்தப் பெண் உள்ளே வந்தாள். ''என்னோட தங்கச்சியைப் பிரசவத்துக்காகப் பக்கத்து அறையில்தான் அட்மிட் பண்ணியிருக்கோம். ஒரு மணி நேரத்துக்கு முன்னாடிதான் இங்கே வந்தோம். வர்ற அவசரத்துல சர்க்கரை டப்பாவை வீட்டிலேயே வெச்சுட்டு வந்துட்டேன். ஹார்லிக்ஸை வெந்நீர்ல கரைச்சப்புறம்தான் தெரிந்தது... உங்ககிட்ட சர்க்கரை இருந்தாஒரு ஸ்பூன் தர்றீங்களா..? தப்பா நினைச்சுக்காதீங்க!''

''சேச்சே! இதுல தப்பா நினைக்கிறதுக்கு என்ன இருக்கு? சர்க்கரை டப்பாவை எடுத்துத்தர்றேன்.. கொண்டுட்டுப் போங்க...!''

அடையாறில் உள்ள வாலண்டரி ஹெல்த் சர்வீஸஸ் டாக்டர்கள் சிசர்ஸ் வங்கிக்கே வந்து, அங்குள்ள விருப்பமுள்ள சில ஊழியர்களிடமிருந்து ரத்தம் சேகரித்தார்கள். நான் பார்த்த அன்று 40, 50 பேருக்குக் குறையாமல் ரத்த தானம் செய்தார்கள். இவ்வாறு தானம் செய்யும் ஊழியர்களுக்கு ஒரு நாள் விடுமுறை கிடைக்கிறது. பணி புரியும் அலுவலகங்களிலேயே இரத்த தானத்திற்கு ஏற்பாடு செய்தால் அதிக அளவில் நோயாளிகள் பயனடைவார்கள்.

அடையாறு வாலண்டரி ஹெல்த் சர்வீஸின் இந்தச் சேவையைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

—பத்மாமணி



ஷெல்ஃபைத் திறந்து சர்க்கரை டப்பாவை எடுத்து நீட்டினாள், சியாமளி.

முகமெல்லாம் சிரிப்பாய் டப்பாவைப் பெற்றுக்கொண்ட அந்தப் பெண், கட்டிலில் படுத்திருந்த குழந்தை சித்ராவை எட்டிப் பார்த்தாள்.

''உங்க குழந்தையா...? உடம்புக்கு என்ன?''

''காய்ச்சல்தான். ஒரு வாரமா இந்த ரெண்டு வயசுக் குழந்தையைப் போட்டு வாட்டி வதைக்குது! நாலஞ்சு சிரப், ஏழு எட்டு வகை மாத்திரை எல்லாமே குடுத்தாச்சு...ஜுரம் மட்டும் இறங்கல்ல...'' சியாமளிக்குத் தொண்டை கரகரத்தது.

அந்தப் பெண் குழந்தை சித்ராவின் கன்னத்தையும் தலையையும் தொட்டுப் பார்த்தாள். ''நான் ஒண்ணு சொன்னா நீங்க தப்பா நினைச்சுக்க மாட்டீங்களே!''

''ம்... பரவாயில்லே... சொல்லுங்க!''

''இந்த க்ளினிக்கைப் பத்தி நான் ஏதும் குறைச்சுச் சொல்லலே. ஒவ்வொரு டாக்டருக்கும் ஒரு ராசி இருக்கு.. சில பேருக்குப் பிரசவம் பார்க்கறதுல கைராசி டாக்டர்னு பேர் எடுத்திருக்காங்க. சில டாக்டர்ஸ் குழந்தையைத் தொட்டுப் பார்த்தாலே போதும்... குழந்தைக்குக் குணமாயிடும்... அந்த மாதிரி குழந்தைகளைக் குணப்படுத்தறதில கைராசி



டாக்டர்னு டாக்டர் நடராஜன் பேர் வாங்கியிருக்கார்... பாலதண்டபாணி கோயிலுக்குப் பக்கத்தில, மங்கள விநாயகர் கோயிலுக்கு எதிர்த்தாப்புல அவரோட க்ளினிக் இருக்கு. மனுஷனோட கை குழந்தை மேல பட்டாலே போதும்... காய்ச்சல்ல முக்கற குழந்தையும் சிரிச்சுடும். இதை நான் அனுபவபூர்வமா பார்த்த உண்மை...!''

சியாமளி அந்தப் பெண்ணையே கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்தாள். அந்தப் பெண் தொடர்ந்து பேசினாள். ''இப்ப மணி பதினொன்று. இந்த நேரம் கூட டாக்டர் நடராஜன் இருப்பார். ஆட்டோவில ஏறினா இங்கிருந்து பத்தே நிமிஷம். எல்லா ஆட்டோக்காரங்களுக்கும் டாக்டர் நடராஜன் க்ளினிக் நன்னாத் தெரியும்...''

அந்தப் பெண் சர்க்கரை டப்பாவோடு நகர்ந்தாள்.

சியாமளி சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவளாய்—

குழந்தையை எடுத்துத்தன்தோளில் போட்டுக்கொண்டு க்ளினிக்கின் வாசலைத் தாண்டினாள்.

டாக்டர் நடராஜனின் சின்ன கிளினிக்கில் அந்நேரத்துக்குக் கூட்டம் அதிகமாக இருந்தது. முக்கால்வாசிப் பேர் குழந்தைகள். நோயில் சிணுங்கும் குழந்தைகளைத் தோளிலும், மடியிலும் போட்டுக் கொண்டு பெண்கள் நீண்ட பெஞ்சுகளில் காத்திருந்தார்கள்.

சியாமளி குழந்தையோடு உள்ளே நுழைந்தாள்.

முன்னால் போடப்பட்டிருந்த ஸ்டூலின் மேல் வைக்கப் பட்டிருந்த டோக்கன்களில் ஒன்றை உருவிக் கொண்டு கடைசியாய்ப் போய் உட்கார்ந்தாள். டோக்கன் நம்பரைப் பார்த்தாள்.

டோக்கன் நம்பர் இருபத்தைந்து.

இருபத்தி நாலு பேர் பார்த்து முடிந்து, சியாமளியின் முறை வருவதற்குள் நிச்சயமாய் இரண்டு மணி நேரமாகும்.

திரைச்சீலை மூடிய அறைக்குள் குழந்தைகளை எடுத்துக் கொண்டு ஒவ்வொருத்தராய் உள்ளே போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருந்தார்கள்.

சியாமளியின் முறை வந்தபோது மணி சரியாய் 1.10

அறைக்குள் மெல்ல நுழைந்தாள்.

ஊசியொன்றை வெந்நீரில் கொதிக்க வைத்துக்கொண்டிருந்த டாக்டர் நடராஜன் விழிகளை உயர்த்தினார். அடுத்த விநாடி திகைத்தார்.

''சியாமளி... நீயா?...என்ன குழந்தையை இங்கியே எடுத்துட்டு வந்துட்டே...?'' —கேட்டுக்கொண்டே நெருங்கினார் டாக்டர்.

சியாமளி தொண்டை அடைக்கக் கூறினுள்: ''குழந்தைக்குக் கொஞ்சம் கூடக் காய்ச்சல் இறங்கல்லீங்க!''

டாக்டர் நடராஜன் அவளைக் கோபமாகப் பார்த்தார்.

''போன் பண்ணி எனக்கு விஷயத்தைச் சொல்லி யிருக்கலாமே...! குழந்தையை இந்த வெய்யில்ல எதுக்காக எடுத்துட்டு வந்தே? கையில என்னது டோக்கனு?''

டோக்கனைக் கணவரிடம் நீட்டினுள் சியாமளி. விழிகளில் நீர் சிதற உதடுகள் துடிக்க அவரை ஏறிட்டாள். ''குழந்தைகளைக் குணப் படுத்துறதுல கைராசியான டாக்டர்னு ஊர் பூரா உங்களை மெச்சிக்கிட்டிருக்கு... இந்த இடத்துக்கு வந்து 'உங்க கை குழந்தைங்க மேல பட்டாலே போதும்... காய்ச்சல்ல அழுற குழந்தையும் சிரிக்கும்'னு எல்லாரும் சொல்றுங்க. அந்த வார்த்தைல நம்பிக்கை வெச்சு நம்ம குழந்தையை இந்த இடத்துக்குக் கொண்டு வந்திருக்கேன். உங்க மனைவியா வராமே... ஒரு நோயாளிக் குழந்தையோட சராசரித் தாயா வந்திருக்கேன்... குழந்தையைத் தொட்டுப் பார்த்து என்ன மருந்து தரணுமோ அந்த மருந்தைக் குடுங்க. இந்தாங்க உங்க கன்ஸல்டேஷன் ஃபீஸ் இருபது ரூபா!''

குழந்தையை மேஜையின் மீதிருந்த ரப்பர் ஷீட்டில் கிடத்திவிட்டு டோக்கனையும், பணத்தையும் அவருடைய கையில் வைத்தாள் சியாமளி.

ஒரு விநாடி திகைத்து, பின்னர் தம்மைச் சுதாரித்துக் கொண்டு டாக்டர் நடராஜன், தம் மனைவியின் நம்பிக்கைக்கு மதிப்புத் தரும் வகையில் டோக்கனையும், பணத்தையும் பெற்றுக் கொண்டு ஸ்டெத்தோடு குழந்தை சித்ராவை நெருங்கினுர்.

தம் குழந்தை என்கிற உணர்வைப் பல வந்தமாய்த் தம் மனத்திலிருந்து பிடுங்கி எறிந்து விட்டு — சித்ராவின் நெற்றியில் வலது கையையும் நாடியில் இடது கையையும் வைத்தார்.




இப் பகுதியில் என்ன கூறுகிறுர் என்பது புரிகிறதா பாருங்கள் புரிய வில்லையென்றால் 20 ம் பக்கம் புரட்டுங்கள்.

ஆங்கிலேயர் நம்மை ஆண்டபோது நடந்த நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ள உதவும் பல குறிப்புகளுள் முக்கியமானது ஆனந்தரங்கம் பிள்ளையின் டைரி. அந்த டைரியிலிருந்து ஒரு பகுதி கீழே கொடுக்கப் பட்டுள்ளது. ஆனந்த ரங்கம் பிள்ளை

## 1743 நொவெம்பர்மீ 2உ அற்பிசிமீ 10உ சனிவாரம் நாள்

மத்தியானம் 11 மணிக்கு துரையவர்கள் நம்மை அழைத்தனுப்பிவித்தார்கள். அவ்விடம் போன இடத்திலே நடந்த சேதி என்னவென்றல் காரைக்கால் திருமலைராயன் பட்டிணத்திலே நாம் கூட்டுகிற சிறுவள்ள லேஞ்சுக்கு அந்த திருமலைராயன் பட்டணம் குத்தகைக்காரன் கனகராய முதலியாருக்குக் கும்பினியார் எழுதிக் கொடுத்திருக்கிற குத்தகைப் பட்டயத்திலே கும்பினியாருக்குக் கொடுக்கிற சரக்குக்குத் தீர்வைக்களவேயில்லை என்று எழுதியிருக்கிறபடியாலே நானதுவரைக்கும் தீர்வை கொடுக்கிறதில்லை. தகரார் பட்டுக் கொண்டு துரையவர்களுடனே நாம் சொல்லியிருந்ததற்கு அவரும் காரைக்காலுக்குக் கடுதாசி எழுதித் தருகிறேமென்று சொல்லியிருந்து சம்மதிக்கு இற்றைநாள் கனகராய முதலி போய் என்னமோ கோடு மாருட்டமாய் ஆசை வார்த்தை சொன்னதின் பேரிலே அவர்கள் நம்மை அழைப்பித்து அந்தத் தீர்வை கொடுத்திருக்கிறபடியினுலே நீ தடைசொல்லத்தேவையில்லை. உண்டானதைக் கொடுத்துவிடென்று சொன்னுர்கள். அதற்கு நாம் சொன்னது குத்தகைப் பட்டயத்திலே எழுதியிருந்ததனுல் கொடுக்கிறேமென்று சொல்லிப்போட்டு வந்துவிட்டோம்.''

# வீட்டுப்பாடம் செய்ய முடியாத அளவு களைப்பா?



# க்ளூகோன்-டி ®

உங்களுக்கு நம்பகமான க்ளாக்லோஸ்-டியின் புதிய பெயர்:

## அதிக சக்தி—அவனுக்குத் தேவையான போது.

புத்துணர்ச்சியூட்டும், குளுமையான, சக்தி தரும் க்ளூகோன்-டி. வைட்டமின்-டி, கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் ஆகியன செறிந்த அசல் க்ளூகோஸ் பவுடர் அடங்கியது. க்ளாக்ஸோ நிறுவனம் அளிக்கிறது. எந்த பானத்திலும் இதனை கலந்து அருந்தலாம். பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ அல்லது நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

க்ளூகோன்-டி உங்களுக்கு வழக்கமான அதே-பச்சை உறையிலே கிடைக்கிறது.




**க்ளூகோன்-டி ®** சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.
**க்ளாக்ஸோ** நிறுவனம் அளிக்கிறது.

HTB-GLL-7200-TL

# நான்காவது வழி!

**போ**லீஸார் அந்த இடத்தை அடைவதற்குள், அந்தக் காரில் ஏதும் மீதம் இருக்கவில்லை. வெடிச் சத்தம் கேட்டதுதான் தெரியும்... அரை மணி நேரத்துக்குள் கார் எரிந்து சாம்பலாகி விட்டது.

யாரும் அருகில் போய் எந்த உதவியும் செய்ய முடியாமல் போய்விட்டது!

அருமையான அம்பாஸிடர் கார்!

சொந்தக்காரன் ஓட்டல் பாடகன் சுதர்சன்! இதில் என்ன கொடுமை என்றால், குண்டு வெடிக்கும்போது அவன் காருக்குள் இருந்ததுதான்.

காபரே ஆடும் சுகன்யா அழுதாள்...

''இந்த நல்ல மனிதரைக் கொல்ல வேண்டும் என்கிற எண்ணம் எந்தப் பாவிக்கு வந்ததோ?''

அதற்குப் போலீஸ்காரர் பதில் சொன்னார்...

''விரோதிகள் இல்லாத மனிதர்களே உலகத்தில் கிடையாது....''

''உங்களைப் போல் உள்ளவர்களுக்கு சுதர்சனைப் பற்றித் தெரியாது.''

''நீங்கள் அறிந்திருக்கலாம்.... உங்கள் பெயர் என்ன?''

''என் பெயர் சுகன்யா....இந்த ஹோட்டலில் வேலை செய்கிறேன்.''

''நீங்கள் போய்விட வேண்டாம். உங்களிடம் ஏதாவது கேட்க வேண்டியிருக்கும்.''

கும்பலை ஒதுக்கி, எரிந்திருந்தகாரின் மீதியைப் பார்த்தபோது, மீதம் சில இரும்புக் கம்பிகளும் ஒரு எலும்புக் கூடும்தான் இருந்தது. அதுவும் முழுமையாக இருக்கவில்லை.

**சு**தர்சன் அந்த நட்சத்திர ஹோட்டலில் பாடகன். சுகன்யாவுக்கு மிக மிக வேண்டியவன். விரைவில் இருவரும் மணந்துகொள்ளப் போகிறார்கள் என்கிற கிசுகிசு உறுதி செய்யப்படாததால் இன்னும் உலாவிக் கொண்டே இருந்தது.

சுகன்யாவின் காபரே அயிட்டங்களுக்கு நடுவே சுதர்ஸன் பாடுவது வழக்கம். அவற்றை ரசிக்கவே தனிக் கும்பல் வரும்! மக்கள் சிரித்து முடிப்பதற்குள் பாட ஆரம்பித்து விடுவான்.... திடீரென்று அமைதி இடம் பெறும்! அந்த மந்திர சக்திக்குத்தான் ஓட்டலில் தனி மரியாதை!–

மாதம் இரண்டாயிரம் சம்பளம்... கார் வசதி.... தனி பங்களா...

அவன் தனி நபர்....

மக்களை மயங்க வைக்கும் அவனுக்கு விரோதிகளா?

சுகன்யாவினால் அழுகையை நிறுத்த முடியவில்லை. விசாரணை முடியும் முன் தன் அறைக்குள் போய் முடங்கிக் கொண்டாள்.

அன்று இரவு நடந்ததுதான் என்ன?

இரண்டு பாட்டுக்களும் மூன்று கதைகளும் முடிந்த பின், சுதர்சன் தன் அறைக்குத் திரும்பினான். அடுத்த ஒரு மணி நேரம் அவனுக்கு ஓய்வு. அன்று சுகன்யாவுக்கு உடல்நிலை சரியில்லை. அதனால் விரைவில் திரும்ப வேண்டும் என்று மானேஜர் சொல்லி யிருந்தார். சற்றுப் படுத்திருந்து எழவேண்டும்.

அவன் அறைக்குள் நுழைந்தவுடன் பின்னால் யாரோ வரவே, சுதர்சன் திரும்பினான்.

''குட் ஈவினிங் மிஸ்டர் சுதர்சன்....''

''குட் ஈவினிங்.... நீங்கள்...?''

''என் பெயர் வேலு... முழுப்பெயர்கதிர் வேலு... கேள்விப்பட்டிருக்க வேண்டுமே''

''கதிர்வேலு.... கதிர்வேலு.... உம் கேள்விப்பட்டிருக்கிறேன்... உங்கள் படத்தையும் பத்திரிகையில் பார்த்திருக்கிறேன். நீங்கள் தீவிரவாதி களாயிற்றே... போலீஸார் தேடுவார்களே''

''மறைந்துதான் வந்திருக்கிறேன்....''

''என்ன விஷயம்?''

''உங்களிடம் கொஞ்சம் பேச வேண்டும்.''

''எங்கள் புரோகிராம் முடிந்தவுடன் வாருங்கள். சாவகாசமாகப் பேசுவோம்.''

''அப்போது நிறையப் பேர் இங்கு வந்து விடுவார்கள். பேச முடியாது...''

சுதர்சனுக்கு எரிச்சலாக இருந்தது. இவனுக்கல்லவா அவன் அட்ஜெஸ்ட் செய்து கொள்ள வேண்டி யிருக்கிறது...

''சொல்லுங்கள்'' என்றான் கோபத்தோடு.

''எங்கள் இயக்கம் மிகவும் வேகமாகப் பரவி, பெரிதாக வளர்ந்து வருகிறது என்பது உங்களுக்குத் தெரியும்...''

''கேள்விப்பட்டிருக்கிறேன்... உங்களுக்கு என் உதவி எவ்வாறு தேவை என்பதுதான் எனக்கு இன்னமும் புரியவில்லை.''

''சொல்லுகிறேன். நீங்கள் இந்த ஓட்டலில் பிரபல பாடகர். எல்லோருடைய மேஜை அருகிலேயும் பாடிக் கொண்டே போகிறீர்கள்.... அதனால் உங்களுக்கு மக்கள் தொடர்பு இருக்கிறது.''

''ஆமாம்... இருக்கிறது....''

''எங்கள் கூட்டத்தாருடன் நாங்கள் சரிவரத் தொடர்பு வைத்துக் கொள்ளவே முடியவில்லை.

''உங்கள் உதவி கிடைத்தால், தினசரி செய்திகள், பண உதவி எல்லாம் போய்ச் சேர வேண்டியவர்களுக்குப் போகும்.''

''அதாவது....?''

''நீங்கள் பாடிக் கொண்டே சில கடிதங்களைச் சிலரிடம் கொடுத்து விடுகிறீர்கள்... அவ்வளவுதான்.''

''அதாவது.... உங்களில் ஒருவனாக.... உங்கள் ஏஜண்டாக என்னை வேலை செய்யச் சொல்லுகிறீர்கள் இல்லையா?''

''ஆமாம்....''

''முடியாது சார்! நான் மக்களை மகிழ்விப்பதில்தான் மகிழ்ச்சி யடைபவன். அரசியல் தொடர்பு எனக்குத் தேவை-யில்லாத ஒன்று....''

''உங்களை உங்கள் தொழிலைச் செய்ய வேண்டாம் என்று தடுக்கவில்லையே... அதைச் செய்து கொண்டே எங்களுக்கும் உதவி செய்யுங்கள் என்றுதானே சொல்கிறோம்...''

''மன்னிக்கவும். என்றால் முடியாத விஷயம் அது....''

அப்போது கதவு தட்டப்பட்டது.

''சுதர்சன்.... சீக்கிரம் வாருங்கள். எனது அயிட்டம் ஒன்றுதான் பாக்கி....''—சுகன்யா ஞாபகப்படுத்தி விட்டுப் போனாள்.

''நிச்சயமாக முடியாதா?'' — கதிர்வேலு.

''முடியாது.....''

''அப்படி என்றால் நீங்கள் எங்கள் விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்டீர்கள் என்று அர்த்தம்....''

''அதனால் எனக்கு நஷ்டமேதும் ஏற்படப் போவதில்லை.''

''நஷ்டமேற்படாது. உயிர்தான் போகும். உங்கள் காரின் முன் சீட்டுக்கடியில் வெடிகுண்டு வைக்கப்பட்டிருக்கிறது. காரின் 'சுவிட்ச்' போட்ட ஏழாவது செகண்ட்... கார் நீங்கள் எல்லாமே தூள்....''

''நல்லவேளை இப்போதே சொன்னீர்கள். போலீசுக்குப் போன் செய்து விடுகிறேன்...''

''போலீஸ் வரட்டும்... நீங்கள் ஒரு காலை விந்தி விந்தி ஸ்டைலாக நடக்கிறீர்களே அந்த ஊனம் எப்படி ஏற்பட்டது என்றும் தெரிந்து கொள்ளலாம்....''

''அதைப் பற்றியும் உங்களுக்குத் தெரியுமா?''

''சுதர்சன்.... உங்கள் சரித்திரத்தைச் சொல்லவா? பதினைந்து வருடங்களுக்கு முன்.... நீங்கள் பெங்களூரில் இருக்கும்போது ஒரு ஓட்டலில் வேலை செய்து கொண்டிருந்தீர்கள். அந்த ஓட்டல் முதலாளிக்கும் உங்களுக்கும் சம்பளத் தகராறு... போராட்டம் நடத்தினீர்கள்... ஏகப்பட்ட கலாட்டா... போலீஸ் · அடிதடி... அப்போது உங்கள் காலில் நல்ல அடி... ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். இரண்டே நாட்கள் ஆஸ்பத்திரியிலிருந்து ஓடிப் போய் விட்டீர்கள்... அன்று இரவுதான் ஓட்டல் முதலாளி கொலை செய்யப்பட்டார்...''

''கொலைக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை.''

''இப்படிச் சொன்னால் எப்படி? கேஸ் கண்டுபிடிக்க முடியவில்லை என்று முடித்து விட்டார்கள்... இப்போது நாங்கள் தகவல் கொடுத்தால் அதற்கு உயிர் வந்து விடும்.''

''போராட்டம் இவ்வளவு தூரத்திற்குப் போய்விட்டதே என்றுதான் நான் ஆஸ்பத்திரியிலிருந்து ஓடி வந்தேன்... அந்தக் கொலையைச் செய்தது யார் என்றும் எனக்குத் தெரியும்.... பரவாயில்லை.... என்னைப் பற்றி மிகவும் அக்கறையுடன்தான் தகவல்களைச் சேகரித்திருக்கிறீர்கள்...''

''எங்கள் வேலை நடக்க வேண்டுமே... வீணாக இந்த வாழ்க்கையைத் துறக்க வேண்டாம்.... சுகன்யாவை மணந்து கொண்டு 'ஹாப்பி'யாக இருங்கள்...''

சுதர்சன் மௌனமாக இருந்தான்.

''மிஸ்டர் சுதர்சன், உங்களைப் பற்றி இவ்வளவு விஷயங்களைத் தெரிந்தவன் நான் ஒருவன்தான். தயவு செய்து எங்களுக்கு உதவி செய்து இதே வாழ்க்கையைத் தொடருங்கள்... அது முதல் வழி... இல்லையென்றால் போலீசுக்குத் தகவல் போகும். உங்கள் ரகசியம் வெளிப்படும். நாங்களும் அவர்களுக்குத் தகவல் கொடுத்து உதவுவோம்.''



''வேறு வழி இல்லையா?''

''மூன்றாவது வழிதான் காரில் அமர்ந்து உயிரை விடுவது....''

ஆக அவனுக்கு எதிராக இந்த மூன்று வழிகள் மட்டுமே... அப்போது இருந்தன.

கதவு தட்டப்பட்டது.

''மிஸ்டர் சுதர்சன் வான்டட்.'' என்கிற குரல்.

''மிஸ்டர் வேலு... சற்று இருங்கள்... பத்தே நிமிடங்களில் திரும்பி வருகிறேன்.''

அப்போது சுதர்சன் பாடிய இரண்டு பாட்டுக்களும் சொன்ன கதைகளும் என்ன என்று அவனுக்கே ஞாபகமில்லை. டேபிளில் இருந்தவர்களுக்குத்தான் தெரியும்.... அவன் எண்ணம்தான் அந்த மூன்று வழிகளில் நிலைத்திருந்ததே...

தீவிரவாதிகளுடன் சேர்வது — சிறைக்குப் போவது — அல்லது காரில் உட்கார்ந்து தற்கொலை செய்து கொள்வது...

**அ**ன்று என்னவோ ஹாலில் கூட்டம் மிகவும் அதிகமாகவே இருந்தது. கைதட்டி அவனை உற்சாகப்படுத்தினர்.

இந்த வாழ்க்கையை விட்டுப் போவதா? எப்போதோ நடந்த தவறுகள் இப்போது திடீரென முளைத்து அவனைப் பயமுறுத்துகின்றனவே! இத்தனைக்கும், அவன் குற்றவாளியே அல்ல!

சரியாக அரை மணி நேரம்....

'ஹிட்' பாடல்களாகப் பாடி அமோகமான கைத்தட்டுக்களைப் பெற்றுக் கொண்டான்... அவனுக்கு நன்றாகத் தெரிந்து இதுதான் அவனது கடைசி நிகழ்ச்சி.....

சரியாக நாற்பது நிமிடங்களுக்குப் பின்னால் ஓட்டலின் பின் பக்கம் — இருட்டான பகுதியில் ஒருவன் மறைந்து நின்று போலீஸார் வருவதைப் பார்த்தான். சுகன்யா அழுதுகொண்டே போலீசாரிடம் பேசுவதைப் பார்த்தான். இனி அவளை அவன் எப்போதுமே பார்க்க முடியாது... அந்த ஓட்டலுக்குள்ளும் பழையபடி நுழைய முடியாது... சுதர்சன்தான் காரில் எரிந்து போனானே....!

இன்னும் ஒரு புதிய பெயர்... புதிய வாழ்க்கை... கதிர்வேலு சொன்ன மூன்று வழிகள் சுதர்சனுக்குப் பிடிக்கவில்லை.

அவன் தேர்ந்தெடுத்தது நான்காவது வழி. அறைக்குள் நுழைந்தவுடன் முதல் வேலையாகக் கதிர்வேலு, எதிர்பாராத நேரத்தில் அவனது மண்டையில் அடித்தான் சுதர்சன்! அவன் மயங்கிக் கீழே விழுந்ததும் அவனைத் தூக்கிக் கொண்டு போய், காரில் முன் சீட்டில் அமர வைத்து, சுவிட்சைப் போட்டு விட்டு இரண்டே விநாடிக்குள் அந்த இடத்தை விட்டு ஓடிவிட்டான், சுதர்சன்!

உலகத்திற்கு அவன் இறந்தவன்தான்!

இனி அவன் 'விந்தி விந்தி' நடக்க வேண்டிய அவசியமும் இல்லை.

---

# இந்தத் தமிழ் புரிகிறதா?

இன்னும் புரியலையே..!



## விடைகள்!

**1743 நவம்பர் மாதம் 2ஆம் தேதி**
**ஐப்பசி மாதம் 10ஆம் தேதி**
**சனிக்கிழமை**

● இன்று பதினொரு மணிக்கு கவர்னர் என்னை அழைத்தனுப்பினார். அங்கு சென்ற இடத்தில் நடந்த நிகழ்ச்சி என்ன? காரைக்கால் பகுதியைச் சேர்ந்த திருமலைராயன்பட்டினம், கனகராய முதலியார் என்பவருக்குக் குத்தகை விடப்பட்டிருக்கிறது. குத்தகைப் பத்திரத்தில் கும்பினிக்காகத் தயாரிக்கப்படும் துணி வகைகளுக்கு வரி விலக்கு அளிப்பதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே நான் இதுவரை (என் ஆணைகளின்படி தயாராகும் கைக்-குட்டைகளுக்கு) தீர்வை கொடுப்பதில்லை. இது தகராறாகவே இருந்து வருகிறது. இது பற்றிக் கவர்னரிடம் நான் முறையிட்ட போது, காரைக்காலுக்கு என் சார்பாக எழுதுவதாகக் குறிப்பிட்டார். ஆனால் கனகராய முதலியார் ஆசை வார்த்தை காட்டி கவர்னரைத் தூண்டி விட்டுள்ளார் என்று தோன்றுகிறது. அதற்கிணங்க அவர் என்னை அழைத்து வரி கட்ட வேண்டும் என்றார். மற்றவர்கள் தீர்வை கொடுத்துள்ளதால் நீமட்டும் தடை சொல்ல இயலாது. உரிய தீர்வையைக் கொடுத்து விடென்று (கவர்னர்) சொன்னார். குத்தகைப் பத்திரத்தில் குறிப்பிட்டிருந்தால் மட்டுமே தீர்வை கட்ட முடியும் என்று சொல்லிவிட்டு நான் வந்து விட்டேன்.

[குறிப்பு: இப்பகுதியில் ஆனந்தரங்கம் பிள்ளை என்ன கூறுகிறார் என்பதை நன்கு விளக்குவதற்காக — உண்மையான சில செய்திகள் கூடுதலாகச் சேர்க்கப் பட்டுள்ளன.]

—வெம்ஜி

## சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின் சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர் பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு இருந்தாலும் கூட தொற்றுப் பரவக் கூடும்.**



தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள கிருபணமான ஆன்டிசெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே: காற்றோட்டமளித்து விரைந்தாற்றும் நுண்துளைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும் நம்பகமான பாதுகாப்பு.**

Johnson & Johnson



OBM/9283

# ஒரு சங்கமத்தைத் தேடி

வாஸந்தி

## 7

**கா**ர்த்திக் ஒரு விநாடி பதில் சொல்லத் தெரியாமல் நின்றான். அவளுடைய கேள்வி மூளையை ஊடுருவிப் பிரக்ஞையைத் தாக்கு வதற்கு முன் அவளுடைய உருவம் மனத்தில் பதிந்தது.

இன்று தலைமயிர் அலையாய் மிதக்கவில்லை. பதவிசாய் ஒரு ரிப்பனுக்குள் அடங்கி யிருந்தது. கன்னத்தின் பளபளப்பு கூடி யிருந்தாற்போல் தோன்றிற்று. கண்கள் இன்னும் விசாலமாக... உதடுகள் இன்னும் சிவப்பாக மிருதுவான ரோஜா மொட்டாய்.

''நான் பேசற தமிழ் புரியலியா?'' அவள் சட்டென்று சுயநினைவுக்கு வந்தான்.

''ஓ! புரியறதே!'' என்று சிரித்தான். ''திடீர்னு தமிழிலே பேசினதும் கொஞ்சம் திகைச்சுப் போயிட்டேன்.''

அவள் மோகனமாகச் சிரித்தாள். ''என் பெற்றோர்கள் தமிழ் நாட்டைச் சேர்ந் தவர்கள்'' என்றாள் ஆங்கிலத்தில். ''அசல் தஞ்சாவூர்! கமான் கெட் இன்! டிராப் பண்ணுகிறேன். எங்கே போக வேண்டும்?''

அவளுடைய எதிர்பாராத உபசாரம் ஆச் சரியமளித்தது. கூச்சப்படுத்தியது.

''ராமகிருஷ்ணபுரம்! பரவாயில்லே. நான் போய்க்கிறேனே?''

''ஓ கமான்!'' என்று அவள் லேசாகச் சிரித்த படி முன் பக்கத்துக் கத வைத் திறந்து விட்டாள்.

அவன் இன்னமும் தயங்கிக் கொண்டு கதவைப் பிடித்தபடி கேட்டான்.

''நீங்கள் போக வேண்டிய இடத்துக்கும் அதற்கும் தூரமாக இருக்காதா?''

''இருந்தால் கூப்பிடுவேனா? கெட் இன்!''

அவன் கூச்சத்துடனேயே காருக்குள் நுழைந்து கதவோரமாக அமர்ந்து கொண் டான்.

''ஆர் யூ கம்ஃபர்டபிள்?''

அவள் குரலில் குறும்பு தொனிக்கிற மாதிரி இருந்தது. அடுத்த நிமிஷம் சிரிப்பில்





வெடிக்கப் போகிறது போல் அதரங்களில் ஓர் உல்லாசப் புன்னகை நெளிந்தது. தலையைச் சாய்த்து அவள் பார்த்த பார்வையும் அவளது அண்மையும் அவனைச் சபலப்படுத்தின.

''ஏதாவது கேட்டால் சட்டென்று பதில் சொல்ல மாட்டீர்களா? பரீட்சை எப்படி எழுதினீர்கள்? இந்த மாதிரி முழித்திருக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.''

அவன் புன்னகை புரிந்தான்.

''கொய்ட் வெல். கேள்விகளையெல்லாம் அச்சடித்துக் கொடுத்தார்கள். நல்லவேளை!''

''வெறும் பேப்பருக்குத்தான் பதில் சொல்வீர்களா? நாளைக்கு இண்டர்வியூவுக்குக் கூப்பிடும்போது என்ன செய்வீர்கள்?''

''இண்டர்வ்யூ போர்டில் மூளையை மழுங்கடிக்கிற அளவுக்கு யாரும் அழகாய் இருக்க மாட்டார்கள்!''

அவள் வாய் விட்டுச்சிரித்தாள். தலையைப் பலமாக அசைத்து மெல்லிய குரலில் சொன்னாள்:

''நான் இதுவரை உங்களை மாதிரி ஓர் ஆசாமியைப் பார்த்ததில்லை!''

அதரங்களில் சிரிப்புமாறாமல் அநுயாசமாகக் காரைச் செலுத்தியபடி அவள் ஓர் ஆங்கில மெட்டை மெதுவாக இசைக்க ஆரம்பித்தாள். பார்க்கப் பார்க்க அவனுக்கு ஆச்சரிய மேற்பட்டது. அவளது பேச்சிலும் பாவனையிலும் தன்னிச்சைத்தனம் தெரிந்தது. ஆச்சரியமாக அது வெகு இயல்பானதாக இருந்தது. அன்

றைக்கு அத்தனை கெடுபிடியுடன் பேசியவள் இன்று வலிய வந்து அழைத்ததற்கான காரணத்தை மனசு ஓர் எதிர்பார்ப்புடன் ஆராயத் தொடங்குகையில் அவளுடைய யதார்த்தம் எல்லாக் கோணங்களிலிருந்தும் உதைத்தது.

அவள் திடீரென்று பாட்டை நிறுத்தி, ''இந்த நீங்க, வாங்க, போங்க வேண்டாம். ஒகே?'' என்று புன்னகை புரிந்துவிட்டு,

''பி. இ. பாஸ் பண்ணினப்புறம் என்ன செய்யப் போறே?'' என்றாள்.

அவளுடைய தமிழ் கொச்சையாக இருந்தது. தமிழில் அதிகம் பேசி இவளுக்குப் பழக்கமில்லை என்று தோன்றிற்று.

''வேலை தேடப் போறேன்!''

''மேலே படிக்கப் போறதில்லையா?''

''ஊஹூம்!''

''மேலே படிச்சா நல்ல ஸ்கோப் இருக்கே''

''எனக்குமேலேபடிக்க'ஸ்கோப்'இல்லே!''

அவள் புன்னகையுடன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் தன் பாட்டைத் தொடர்ந்தாள்.

அதைக் கலைக்கலாமா கூடாதா என்று யோசித்து, அவள் மூச்சு வாங்கச் சற்று நிதானித்தபோது கேட்டான்.

''நீ என்ன பண்ணப் போறே?''

அவள் தோளைக் குலுக்கிச் சிரித்தாள்.

''டோண்ணோ! முதல்லே பரீட்சை ஆகட்டும். இரண்டு மாசம் தள்ளிப் போயிடுத்தே பரீட்சை ஸ்ட்ரைக்கினாலே!''

அவனை இடையில் கூர்ந்து பார்த்தபடி வெகுநாள் பழகிய சிநேகிதனிடம் பேசுகிற மாதிரி சொன்னாள்.

''ஸ்ட்ரைக் பண்ணினத்தான் இந்தத் தேசத்திலே நம்ம காரியம் நடக்கும்கிற நிலைமை பைத்தியக்காரத்தனமா இல்லே? இந்த ஸ்ட்ரைக் நடக்கலேன்னா இந்த டீச்சர்ஸோடைய பிரச்னைகளைப் பத்தி அரசாங்கத்துக்குப் பிரக்ஞை ஏற்பட்டிருக்கும்னு நினைக்கிறியா?''

அவனுக்குச் சட்டென்று விஜயின் ஞாபகம் வந்தது. நல்ல வேளையாக ஸ்டிரைக் முடிந்து விட்டது. ஆசிரியர்களின் கோரிக்கைகள் ஏற்கப்பட்டு, கல்லூரிகள் திறந்து இதோ பரீட்சையும் நடக்கப் போகிறது. ஒரு வருஷம் வீணாகி விடாது விஜய் பயந்த மாதிரி.


''சிறைக் கைதிகளுக்குப் படம் காட்டப் போகிறோம்.''
''என்ன படம்?''
''மலைக்கள்ளன், பக்காத் திருடன், சி. ஐ. டி. சந்துரு, கள்வனின் காதலி..''

இவளுக்கு ஒரு சராசரி மாணவனின் கவலைகள் எல்லாம் இருக்கும் என்று தோன்றவில்லை. இவளுடைய சிந்தனைகள் வேறு கோணத்தில் இருக்க வேண்டும்.

''பித்தலாட்டக்காரி.... இவளுடைய மெதப்பான போக்கும் கார் ஓட்டும் அலட்சிய லாகவமும் அவன் பதிலை எதிர்பாராமல் தொடர்ந்து பாட ஆரம்பித்த ஆங்கில மெட்டும், விஜய் சொன்னது வாஸ்தவமாக இருக்கலாம் என்று தோற்றுவித்தன. இவள் மாணவியாக இருப்பதற்கும் பிரத்தியேகக் காரணமில்லை... இவள் பேசும் வாதங்களுக்கு ஏதும் காரணமில்லாதது போல்... எல்லாமே அவளுடையபொழுது போக்குகள். நாளையபாடு எப்படி இருக்கும் என்கிற பயங்கரக் கேள்வியைச் சந்திக்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லாத மேல் மட்டத்துப் பொழுது போக்குகள்... இதே குணத்தினால்தான் இவள் ஒரு நாளைக்கு நம்மை அலட்சியம் செய்கிறாள்; இன்னொரு நாளைக்கு ஏகமாய் உபசரிக்கிறாள்... எல்லாமே இவளுக்கு விளையாட்டு....

''என்ன யோசனை?''

''ஒண்ணுமில்லே... உன் பாட்டை ரசிச்சிண்டிருந்தேன்!''

அவள் சிரித்தாள். ''யூ மஸ்ட் பீ ஜோக்கிங், எங்கம்மா பாடி நீ கேக்கணும். க்ரேட் ஸிங்கர்! சுத்தமான கர்நாட்டிக் ம்யூஸிக்!''

''நீ பாடுவியா?''

''நோப்!எனக்கு அதுக்கெல்லாம்பொறுமையில்லே! அந்த மாதிரி ஆடம்பரங்களுக்கு நேரம் எங்கே இருக்கிறது 'யார்'?''

அவனுக்குச் சிரிப்பு வந்தது.

தான்பேசியதை அவன்பரிகாசமாகஎடுத்துக் கொள்கிறான் என்று நினைத்தவள் போல் திடீரென்று தீவிரமான முகபாவத்தோடு அவள் படபடப்புடன் ஆங்கிலத்தில் சொன்னாள்.

''உனக்குள் ஒரு பிரக்ஞை இருந்தால் நான் சொல்வது புரியும். உன்னைச் சுற்றிப் பார். நம்ம தேசத்தில் மூன்று பேரில் ஒருத்தன் பட்டினி கிடக்கிறான். ஏனென்றால் அவன் சாப்பாட்டை மற்ற இரண்டு பேரும் பிடுங்கிக் கொள்கிறார்கள். எந்தப் பக்கம் திரும்பினாலும் ஊழல். அக்கிரமம். மனித உயிருக்கு மதிப்பே இல்லாமல் போய் விட்டது. அஸ்ஸாமில் என்ன நடக்கிறது பார்த்தாயா? தேங்காயைக் கூடத் தட்டிக் கொட்டிப் பார்த்துத்தான் உடைப்போம். அங்கே கண்ணை மூடிக் கொண்டு மண்டையை உடைக்கிறார்கள்! இந்த மாதிரி ஒரு கால கட்டத்தில் என் பாட்டி ஆசைப்பட்டான் என்று நான் பாட்டுப் பாடி, பரத நாட்டியம் செய்தால் எப்படி இருக்கும்? ரோம் எரியும்போது நீரோ பிடில் வாசித்ததுபோல் இருக்கும்!''

அவன் வாய் விட்டுச் சிரித்தான். ''அது ரொம்பக் குரூரமான, சம்பந்தமில்லாத உபமானம்!''

அவள் தோளைக் குலுக்கினாள். ''என்ன செய்வது? உண்மை குரூரமானது. அதை விடக் குரூரமானது ஜனங்களின் ஜடத்தனம். மற்றவனுக்கு என்ன ஆனால் என்ன என்கிற சுயநலம்!''

**ஒரு இல்லத்தரசியின் பொறுப்புக்களை மதிப்பது போலவே அவரின் கனவுகளையும் நாங்கள் ப்ரியத்துடன் உணர்கிறோம்...**

கனவாய் நிழலிட்டவை கைகளில் நிஜமாய்ப் பொலிய எங்களது ரிக்கரிங் டிபாசிட் திட்டம் பெரிதும் உதவுகிறது. மாதாமாதம் நீங்கள் சேமிக்கிற 100/- ரூபாய் ஓரே ஆண்டில் 1253/- ரூபாயாகக் கிடைக்கிறது.



கனவுகளிலிருந்து நிஜத்திற்கு யதார்த்தமான வழிமுறைகள் வழங்கும்

**பாங்க் ஆப் தமிழ்நாடு லிட்.,**

(ஒரு ஷெட்யூல்ட் பாங்க், ஸ்தாபிதம் 1903)

62, கீழரத வீதி, திருநெல்வேலி டவுன்.

EP-BT-103-82

**உங்களுக்காகவே நாங்கள்**

# Hallmark DELUX

# எவர்சில்வர் கியாஸ் ஸ்டவ்.



IS : 4246



## நவீன தொழில் நுட்பம் கொண்டது

- வெளியே எடுத்துச் சுத்தம் செய்யக்கூடிய எவர்சில்வர் தட்டுகள்.
- பாத்திரங்களை தாங்க இறக்குமதி செய்யப்பட்ட ஸ்டீலால் உருவாக்கப்பட்ட தாங்கிகள்.
- ரப்பர் கால்கள் இணைந்தே உள்ளதால் தனியாக ஸ்டாண்ட் தேவையில்லை.
- கியாஸை சேமிக்க பிரத்யேகமாக வார்க்கப்பட்ட பர்னர்கள்
- வெகுநேர உபயோகத்திற்கு பின்னும் சூடேறாத வடிவமைப்பு
- 5 வருடங்களுக்கு உத்திரவாதம்



தயாரிப்பாளர்கள்;
ஓரியண்டல் அப்ளையன்ஸஸ்
சென்னை 600 013

242, எஸ்.என். லேஅவுட்
கிராஸ் கட் ரோடு அருகில்
கோயம்புத்தூர்-641 012,



விற்பனையாளர்கள்
நிஷ்சாதீப் எண்டர்பிரைஸஸ்
8, விக்டோரியா கிரஸண்ட்
எழும்பூர், சென்னை 600 105
போன் : 811403

கிளைகள்
பெங்களூர், ஹைதராபாத்
மற்றும் விஜயவாடா

Hallmark

இல்லத்திற்கேற்ற உபகரணங்களில் உயர்ந்த அந்தஸ்து பெற்றது !

Sista's-NDE. 99.82. TM.A



அவன்: அடிக்கடி அந்த நடிகை நம்முடைய ஓட்டலில் வந்து தங்குகிறளே, கவனித்தாயா?

இவன்: ஆமாம். தன்னுடைய ஒவ்வொரு தேனிலவுக்கும் இங்குதான் வருகிறள். -கே. கணேஷ்

அவள் அவனைத்தான் குறிப்பிடுகிறளோ என்று அவனுக்குச் சந்தேகம் வந்தது.

நீளப்போய் உத்தரசுவாமி மலையின் குன்றுக்கெதிரில் வண்டியை நிறுத்தச் சொன்னதும் அவள் வியப்புடன் அவனைப் பார்த்தாள்.

''இது கோவில்னு?''

''இங்கதான் நான் இருக்கேன்!''

அவள் விநோதமாக மலையையும் கோவிலையும் அவனையும் பார்த்தாள்.

''முருகனுடைய அட்ரஸ் இல்லையோ இது?''

''என்னுடைய அட்ரஸும் இதுதான்'' என்றுன் அவன் அடக்கமாக.

அவள் பகபகவென்று சிரித்தாள். ''டெல் மீ! நீ ஏதும் அவதாரம் ஒன்னுமில்லையே? உன்னைப் பார்த்தா எனக்குக் கொஞ்சம் சந்தேகமா இருக்கு!''

அவனுடைய காது நுனிகள் கூச்சத்தில் சிவந்தன.

''என்ன சந்தேகம்?''

''மத்த பையன்களுக்கும் உனக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு — பேச்சிலே, பார்வையிலே! சாமியோட தலைக்குப் பின்னுலே ஒரு வட்டம்—ஹேலோ வரைவாளே அது மாதிரி உன்கிட்ட என்னமோ இருக்கு!''

அவனுள் ஏற்பட்ட சங்கோஜத்தை மறைக்க அவன் பெரிதாகச் சிரித்தான்.

''ஸாரி, நான் சாதாரண மனுஷப் பிறவிதான். இனிமே என் முகத்தை மாத்திக்கவும் முடியாது!''

அவள் புருவங்களை உயர்த்திச் சிரித்தாள்.

''எதுக்கு மாத்திக்கணும்? அந்த 'ஹேலோ' விலேதான் உன் ப்ளஸ் பாய்ன்ட் இருக்கு!''

நம்ப முடியாத அபத்தமான பாராட்டாகத் தோன்றிற்று. ஆனுல் அவள் கண்களில் பரிகாசம் தெரியவில்லை.

''யூ மஸ்ட் பீ ஜோக்கிங்!''

''நோ, ஐ ஆம் நாட்! பை!''

அவன் ஏதும் பதில் சொல்வதற்கு முன், அவள் காரைக் கிளப்பிக் கையை அசைத்துப் போனதும் அவன் வீட்டுக்கு நடந்தான்.

''பரீட்சை எப்படிப் பண்ணினே?''

அவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான். கணேசனும் மன்னியும்! இஸ்திரி மடிப்புக் கலையாத ஷர்ட். வெளேர் வேஷ்டியில் கணேசன் பளிச்சென்றிருந்தான். மையிட்டாற் போன்ற கரிய விழிகளும் சிவந்த உதடுகளும் வசீகரமாகப் புன்னகைத்தன. மன்னிகோமதி சற்றுத் தள்ளிக் கூச்சப் புன்னகையுடன் நின்றுள்.

''நன்னப் பண்ணியிருக்கேன் அண்ணு! எங்கே இப்படி?''

கணேசன் இயல்பாகச் சிரித்தான்.

''கோவிலிலே இன்னிக்கு எனக்கு ட்யூட்டி இல்லே. ரெஸ்ட் நாள். 'சங்கம்' தியேட்டர்லே ஏதோ படம் ஓடறதாம்....''

''ஹிந்திப் படம்னு? மன்னிக்குப் புரியுமா?''

''மடையா! நான் எதுக்கிருக்கேன்?''

முகம் சிவக்கக் கோமதி கணேசனுடன் சேர்ந்து நடந்தாள்.

திடீரென்று லேசாகிப் போயிருந்த மனசில் உற்சாகம் கொப்பளிக்க அவன் தன்னையறியாமல் ஒரு மெட்டை இசைத்தபடி வீட்டுக்குள் நுழைந்தான். ஏதோ தமிழ்ப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்த அத்தை வியப்புடன் நிமிர்ந்தவள் ''என்ன இன்னிக்கு சீக்கிரம் வந்துட்டே? பரீட்சை நன்னப் பண்ணினயா?'' என்றுள்.

''நீங்க ஆசீர்வாதம் பண்ணி அனுப்பும் போது மோசமாய்ப் பண்ணுவேனு அத்தை?''

அத்தையின் முகம் மலர்ந்து போயிற்று.

''என்னைக் காக்காய் பிடிச்ச என்னடா பிரயோஜனம்?''

சூடாக் காப்பியும் டிபனும் கூடக் கிடைக்காதா?''

அத்தை சிரித்துக் கொண்டே எழுந்து செல்லமாக அவன் காதைத் திருகினுள்.

''கிடைக்கும் வா.''

அவன் உள்ளே நுழையும்போது அப்பா சந்தியாவந்தனத்தை முடித்துவிட்டுக் கோவிலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்.

''பரீட்சை எல்லாம் முடிஞ்சு போச்சோ இல்லையோ?''

''இன்னும் இரண்டு மாசத்திலே இன்ஜினியரிங் பட்டம் வாங்கப் போறுன் அண்ணு!''

அவனுக்கு அது காதில் விழுந்ததாகத் தெரியவில்லை.

''காப்பி டிபன் சாப்பிட்டப்புறம் குளிச்சுட்டு சித்தக் கோவிலுக்கு வா, எனக்குக் கூடமாட ஒத்தாசை செய்ய. கணேசனும் வெளியிலே போயிருக்கான். என்னோட சன்னிதியிலே இருக்கிற நடேசனுக்கும் உடம்பு சரியில்லே!''

அவன் பதில் ஏதும் பேசாமல் நிற்க, அவர் கிளம்பிக் கொண்டே சொன்னுர், ''இன்ஜினியரோ டாக்டரோ எதுவானுலும் நீ ஒரு குருக்கள் பிள்ளேங்கிறதை மறந்துடாதே!''

சாட்டையடி போல் விழுந்தன வார்த்தைகள். சற்று முன் மனத்தில் பொங்கிய உற்சாகம் அதில் அடிபட்டுப் பிசுபிசுத்துப் போயிற்று.

(தொடரும்)

# மோகன அஞ்சலி!

'சுபா'

மோகனரங்கன் இன்னொரு தடவை கடிகாரத்தைப் பார்த்தான். சுள்ளென்று கண்ணைக் குத்தியது நேரம். பதறி எழ முனைந்தான். அடுத்த கணம் தோளில் அந்தக் கை மிருதுவாய் விழுந்து அழுத்தியதும் சட்டென்று நாற்காலியில் சரிந்தான். ஒன்றும் இயலாதவனாய்த் தலையை நிமிர்த்திப் பார்த்தான்.

''நேரமாய்டிச்சி சாந்தா. நான் ஆர்கனைஸ் பண்ணிட்டு மீட்டிங்குக்கு நானே லேட்டாப் போனா நல்லா இருக்காது...''

''எத்தனை மணிக்கு மீட்டிங்?''

''சரியா ஆறு மணிக்கு.''

''யார் யார் பேசப் போறாங்க?''

''பத்துப் பன்னிரண்டு பேர்... வெங்கடகிருஷ்ணனோட பழகினவங்க, அவரோட எழுத்தை ரசிச்சு ரசிச்சு பப்ளிஷ் பண்ணவங்க, அவராலே இன்ஸ்பயர் ஆகி அதே மாதிரி எழுதக் கத்துக்கிட்டிருக்கிற என்னை மாதிரி யங்ஸ்டர்ஸ்னு ஒரு பெரிய லிஸ்டே இருக்கு. ஏன்?''

''நீங்க எத்தனாவதாப் பேசப் போறீங்க?''

''ஏழாவதா....''

''ஒருத்தர் பத்து நிமிஷம் பேசறார்னு வச்சுப்போம். இன்னும் ஒரு மணி நேரம் கழிச்சுத்தான் உங்க டர்ன் வரப்போறது. கரெக்டா டயத்துக்குப் போயிடலாம்... இருங்க.''

''இல்ல சாந்தா...'' என்று அவளை ஒதுக்கிக்கொண்டு மோகனரங்கன் எழுந்தான். ''என் மனச்சாட்சி இடம் கொடுக்காது. அவர் இல்லேன்னா எனக்கு இன்னிக்கு இவ்வளவு பேரும் புகழும் வந்திருக்காது...''

''நீங்க நல்லா எழுதினீங்க... பத்திரிகைக்காரங்களுக்குப் பிடிச்சிருந்தது... போட்டாங்க... இதில அவர் எங்க வந்தாரு?''

''இல்ல சாந்தா... நான் எழுதலே. அவரோட 'ப்ரபஞ்சம்' கதையைப் படிக்கறதுக்கு முன்னாடி எனக்கு எழுத்துன்னா க, ங, ச, ஞான்னுதான் தெரிஞ்சிருக்கும்... அந்த புஸ்தகத்தைப் படித்ததுக்கப்புறம்தான் இந்த உலகத்தில இத்தனை விஷயம் இருக்கு தெரிஞ்சுக்கிறதுக்கு. இத்தனை விஷயம் இருக்கு அனுபவிக்கிறதுக்குன்னு தெரிஞ்சது. வார்த்தையிலேயே படம் காட்டற வித்தை அவருக்குத்தான் தெரியும்... அவர் கதையை மையமா வச்சு எழுதின ஊர்லயும் தெருவிலயும் ஜோல்னாப் பையை மாட்டிக்கிட்டு அலையறவங்க எத்தனை பேர் தெரியுமா?''

''அதுக்காக அவர் செத்தப்புறம் மீட்டிங்ல போய் ஆஹா ஓஹோன்னு பேசாட்டா தப்பாப் போயிடுமா?''

''நான் நெஜத்தைப் பேசப் போறேன். சாந்தா... நிஜமாவே வெங்கடகிருஷ்ணனை, அவரோட எழுத்தை அணு, அணுவா ரசிச்சு, அனுபவிச்சு, அழுது, சிரிச்சு, வேர்த்து, துடைச்சு.... என்னோட அத்தனை உணர்ச்சிகளையும் மீட்டினவர் சாந்தா அவர்.''

''எழுத்தாளன் பாஷையிலே பேச ஆரம்பிச்சாச்சா?''

''டயமாச்சு சாந்தா.''

''அப்புறம் உங்க இஷ்டம்... நாளைக்கு வந்து எட்டி எட்டிப் பாருங்க. கீழ உங்க பெண்டாட்டி விடற மூச்சு சத்தம் கேக்கறப்பல்லாம் பயந்து பயந்து செத்திட்டிருங்க... நாளைக்குக் காலைல இவரும் வந்து சேர்ந்துடுவாரு...அப்புறம் அவர் எப்ப வெளியில போவார்... உங்க பெண்டாட்டி எப்ப அசந்து போயிருப்பான்னு தவிச்சு தவிச்சு மாடிப் படிக்கிட்ட நின்னுட்டிருங்க...''

''இன்னிக்கு மட்டும் சாந்தா... ப்ளீஸ்...''

''இன்னிக்கு மட்டுமென்ன... என்னிக்குமே நீங்க ம்னு நான் சரிங்கணும். நீங்க வேண்டான்னிட்டா அப்படியேன்னு என் மனசைக் கட்டுப்படுத்திக்கணும்... அப்படித்தானே... போய்ட்டு வாங்க...''

''உம்முன்னு மூஞ்சியைத் தூக்கி வச்சுக்காமச் சொல்லேன்.''



''ஏன் சொல்லணுமாம்? அவரும் ஊர்ல இல்ல... ராதிகாவும் குழந்தையோட சினிமாவுக்குப் போயிருக்கிற மாதிரி இன்னொரு நாள் சான்ஸ் வரப்போவுதா?''

''இப்ப என்னை என்ன பண்ணச் சொல்ற சாந்தா...'' என்று இறைஞ்சினான்.

''இஷ்டமில்லாம நின்னு பேசிக்கிட்டிருக்காம உங்களுக்குப் பிடிச்சவங்களைப் பத்தி பிடிச்ச இடத்தில போய்ப் பேசுங்கன்னு சொல்றேன்.''

மோகனரங்கன் அவளைக் கண்கொட்டாமல் பார்த்தான். ஒரு காலை தரையில் தொட்டும் தொடாமலும் ஊன்றிக் கொண்டு நாற்காலியின் சாய்வைச் சமாளித்து அவள் உட்கார்ந்திருந்த விதத்தில் மார்புப் புடவை மடிப்போடு விலகிப் போயிருந்தது. ரவிக்கையின் கீழ்ப் பட்டி உருண்டு சற்று மேலேறியிருந்ததில் உடம்பை இன்னும் கெட்டியாய்ப் பிடித்திருந்தது. விண்ணென்று இடுப்புப் பகுதியும், வயிறும் அதில் மினுமினுக்கிற வியர்வையும், அவள் தலையைச் சற்றுச் சாய்த்துப் பார்க்கையில் மேலே உருண்டிருந்த ஒயிலான விழிகள். மோகனரங்கன் தவித்துப் போனான். கால்கள் தொய்யத் தொய்ய அவளை நோக்கி சின்னக் கிறக்கத்துடன் வந்தான். நேரே அந்த இடுப்பில் கையை மலர்த்தி வைத்துப் பிடித்து இழுத்துத் தூக்கித் தன்னுடன் இறுக்கிக் கொண்டான். அவளின் சூடான வயிறு அவனது மெல்லிய கதர் ஜிப்பாவை மீறி உடம்பில் படிந்தது. புருவங்களுக்கு மத்தியில், மூக்கு நுனியில் என்று இறங்கி அவளின் உதடுகளில் அழுந்திக் கவ்விக்கொண்டான். அவள் மெல்லக் கால் மடங்கித் தரையில் மல்லாக்கச் சாய்ந்தாள். அந்த மூச்சின் தகிப்பு அவனையும் சாய்த்தது.

“**சா**ந்தா போய்ட்டு வந்திடறேனே சாந்தா....'' என்று அவன் மறுபடியும் இறைஞ்சியபோது மணி ஆறரை ஆகியிருந்தது. மனத்தில் குற்ற உணர்வு குடைந்து கொண்டிருந்தது.

''எப்ப வருவீங்க?''

''மீட்டிங் முடிஞ்ச கையோட...''

''பத்து மணிக்கு முடியும்... கதவைத் தட்டுங்க... ராதிகா வந்து தெறக்கட்டும்.''

''சேச்சே.... அவ்வளவு டயமாகாது சாந்தா.''

''பின்னை எப்ப வருவீங்க?''

''எட்டரை ஒன்பதுக்கெல்லாம் மீட்டிங் முடிஞ்சுடும். உடனே ஸ்கூட்டரை உதைச்சா பத்து நிமிஷத்தில இங்க இருப்பேன்.''

''ரெண்டு மணி நேரம் நான் இங்க ஜபம் பண்ணிக்கிட்டிருக்கணுமா?''

''அவ்வளவு நேரம் கூட ஆகாது சாந்தா. இரங்கல் கூட்டம்தானே சீக்கிரம் முடிஞ்சிடும் சாந்தா... ப்ளீஸ்... ஆல்ரெடி லேட்டாயிருக்க....''

''ஓகே. போயிட்டு வாங்க. ஆனா ஒரு கண்டிஷன்.''

''என்ன?''

''சரியா ஏழரைக்கு நீங்க இங்கே இருக்கணும்.''



''ஏழரைக்கா? எப்படி சாந்தா?''

''எப்படிங்கறதெல்லாம் எனக்குத் தெரியாது... சரியா ஏழரை மணிக்கு இங்க இருக்கணும். அவ்வளவுதான் எனக்குத் தெரியும். ஒரு மாசமாச்சு நாம உக்காந்து பேசியே... இன்னிக்குக் கிடைச்சிருக்கிற டயத்துல ஒரு நிமிஷத்தைக் கூட வேஸ்ட் பண்ண எனக்கு இஷ்டமில்ல... எனக்காக... எனக்காக நீங்க விட்டுக் கொடுக்கக் கூடாதா?''

''ரெண்டு நாளா யோசிச்சு யோசிச்சு என்னோட உணர்ச்சிகளை யெல்லாம் அழகாக் கோத்து 'நறுக்' 'நறுக்'னு பேசறதுக்குத் தயார் பண்ணி யிருக்கேன் சாந்தா... அவர் என்னோட மானசீக குரு. அவரைப் பத்தி அவர் கூடப் பழகினவங்க சொல்ற விஷயங்களை யெல்லாம் ஒண்ணு விடாமக் கேக்கணும் போல இருக்கு... எனக்குத் தெரியாத வெங்கடகிருஷ்ணனையும் தெரிஞ்சுக்கணும்னு நான் காத்துக்கிட்டிருக்கேன் சாந்தா.''

''ஏழரை மணிக்கு .... ப்ளீஸ் ... அப்பத்தான் ஒரு மணி நேரமாவது நாம கொஞ்சம் நிம்மதியான சந்தோஷமா இருக்கமுடியும்... ப்ளீஸ்...'' அவனுடைய ஜிப்பாவின் கழுத்துப் பிளவில் உதடுகளை வைத்து யாசிப்பில் தோய்ந்து அவள் சொன்னபோது அவனால் உறுதியாய் முடியாது என்று சொல்ல முடியவில்லை.

அடையாறில் ஒரு சந்தடியற்ற மூலையில் ஒரு சின்ன நூலகக் கட்டிடத்தில் இரங்கல் கூட்டம் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. நூற்றிருபது பேர் அமரக் கூடிய சின்ன ஹால். அத்தனை நாற்காலிகளும் ஆக்ரமிக்கப்பட்டு ஒரு பத்துப் பன்னிரண்டு பேர் சுவரோடு சாய்ந்து நின்று கொண்டிருந்தார்கள்.

மோகனரங்கன் தெரு முனையிலேயே இன்ஜினை மௌனப்படுத்தி விட்டான். ஸ்கூட்டர் மெல்லிய மூச்சோடு காம்பவுண்டுக்குள் நுழைந்தது. மணியைப் பார்த்தான். ஏழு அடிக்கப் பத்து நிமிடம். ஸ்டாண்ட் போடு கையில் 'துர்வாசன்' ஓடிவந்தார்.

''என்ன மோகன் இப்படிப் பண்ணிட்டே?''

''ஸாரி... ஸாரி... ஆபீஸ்ல ஒரு சின்ன ஆக்ஸிடெண்ட்... கீழ விழுந்து காலை ஒடிச்சுக்கிட்டான் ஒருத்தன். அவனை உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போக வேண்டிய அவசரம்....அட்மிட் பண்ணிட்டுப் பக்கத்தில் வேறு ஒருத்தனைப் போட்டுட்டு ஓடி வந்திருக்கேன். ஏற்கனவே மனசு அப்செட் ஆகியிருந்திச்சு.... இன்னிக்குன்னு பார்த்து இந்த ப்ராப்ளம் வேற... மீட்டிங் ஆரம்பிச்சாச்சு இல்ல?''

''நடந்துக்கிட்டிருக்கு... நீ வருவ வருவன்னு கொஞ்ச நேரம் வெயிட் பண்ணோம்... அப்புறம் தலைவர் வந்தவுடனே ஆரம்பிச்சிட்டோம்.''

துர்வாசன் கதர் வேஷ்டியும் கதர் ஜிப்பாவும் நரை முடியுமாய் ஏகமாய் மரியாதையை அவனிடம் ஆண்டு கொண்டிருப்பவர். போன தலைமுறையில் வெங்கடகிருஷ்ணனுடன் அடிமை இந்தியாவிலும் சுதந்திர இந்தியாவிலும் சுவாசித்தவர். இத்தனை பெரியவரிடம் பொய் சொல்கையில் மோகனரங்கனுக்குத் தலையைச் சற்றுத் தாழ்த்திக் கொள்ள வேண்டி யிருந்தது.

''வா....உள்ளே வா....''

நுழைந்தான். மேடையில் பேசிக்கொண்டிருந்த சமகாலத்திய சுந்தரவதனம் இவனைக் கண்ணாலேயே ஏன் தாமதமென்கிற மாதிரி சினந்தாய் முறைத்து விட்டு வெங்கட்கிருஷ்ணனின் எழுத்து அவனது இளமையை எப்படி ஹிம்ஸித்தது, எப்படிப் பதப்படுத்தியது, எப்படி ரசப் படுத்தியது என்று தொடர்ந்து பேச ஆரம்பித்தான்.

மோகனரங்கத்துக்கு மனசு பதைத்தது. இன்னும் சுந்தரவதனம் எவ்வளவு நேரம் பேசப் போகிறான் என்று தெரியவில்லை. பத்தே நிமிடங்கள் கிடைத்தால் போதும். விளாசிவிடலாம் போல விஷயங்கள் பை நிறைய இருந்தன. எழுத்தை மட்டுமில்லாது, வெங்கடகிருஷ்ணனின் வயசு வித்தியாசம் பாராத தோழமை பற்றி, வாழ்க்கையில் காணுகின்ற ஒவ்வொரு அனுபவையும் அவர் ரசிக்கச் சொல்லிக் கொடுத்தது பற்றி...

---

## ஹோம சிகிச்சை

காலையும் மாலையும் அக்னி வளர்த்து ஹோமம் செய்வதால் என்னென்ன உடல் நல அபிவிருத்தியை அடையலாம் என்று பாரி ரத்னர் என்ற அமெரிக்க மனோதத்துவ நிபுணர் பூனா பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி செய்துவருகிறார்.

ஹோமம் செய்யப்பட்ட அறையில் உடனே கிருமிகளின் எண்ணிக்கை 91 சதவிகிதம் குறைந்து விடுகிறதாம்.

மேற்கு ஜெர்மனியிலும் விஞ்ஞானிகள் இதைப் பற்றி ஆராய்ச்சி செய்து ஹோமப் புகை, ஜலதோஷம், தலைவலி, ஆறாத புண், ஆஸ்துமா, அலர்ஜி, வயிற்றுப் போக்கு, சேற்றுப் புண், தசைநார் வலி, டான்ஸிலைடிஸ் முதலிய பல்வேறு நோய்களைக் குணப்படுத்த வல்லது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

**ஆதாரம்: டெக்கான் ஹெரால்ட்**
**தகவல்: ஜெயா**



நிறையச் சொல்ல வேண்டும். மனசில் சின்ன ஒத்திகைகூட முடிந்திருந்தது. ஆனால் எப்போது? இன்னும் எவ்வளவு நேரம் காத்திருத்தல், காத்திருக்கிறது?

மேடையை ஒட்டினாற்போல் நின்றுகொண்டான். சபையை மெதுவாய்க் கண்களால் அளந்தான். இரண்டொரு பரிச்சய முகங்கள் மலர்ந்தன. நிறைய முகங்களில் சோகம் நிழலாய். தாடி வைத்த, வைக்காத, மீசை வைத்த, வைக்காத, வழுக்கையான, ஆகாத, நிறைய முகங்கள். எல்லோரும் பேச்சில் ஆழ்ந்திருந்தார்கள். 'உச்', 'உச்' என்று அவ்வப்போது துக்கக் குறிகள். மணியைப் பார்த்தான். மெல்ல துர்வாசனிடம் போனான்.

''நெக்ஸ்ட் நான் தானே சார் பேசணும்?''

''இல்லை மோகன்... நீ வரதுக்கு லேட்டாயிட்டிருந்தது. நடுவுல ரெண்டு மூணு பேர்பெயர் குடுத்தாங்க...அவங்களையும்சேர்த்தாச்சு... உன்னோட டர்ன் தள்ளிப் போயிருச்சி... இன்னும் இரண்டு பேர் இருக்காங்க'' பதிலென்றது.

''அப்படியா?'' நாவை நீக்கி உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டான். சாந்தா நெஞ்சில் உதைத்தாள்.

மேடையருகில் கடிகாரம் ஏழு ஐந்து காட்டுகையில் சுந்தரவதனம் இறங்கினான்.

''அடுத்து பிரேமநாதன்'' என்றார் தலைவர்.

இருப்புக் கொள்ளாமல் நின்ற இடத்திலேயே நெளிந்தான். மேடையிலேயே அமர்ந்தான்.

''என்னப்பா ரெஸ்ட்லஸா இருக்க? முடியலையா?'' என்றார் துர்வாசர்.

''ஒவ்வொருத்தரும் பேசப் பேச வெங்கடகிருஷ்ணன் கண்ணு முன்னாடி வந்து நிக்கறார். என்னைப் பார்த்துக் கேலியாச் சிரிக்கிறார்... இனிமே உங்களோடெல்லாம் பேசறதுக்கு எனக்கு இஷ்டமில்லேங்கற மாதிரி விலகிப் போயிட்டாரே....''

கண்ணிலிருந்து சாட்டை மாறி மாறிக் கடிகாரத்திலும் பேச்சாளரிடமும் படிந்து படிந்து எழுந்தது.

பிரேமநாதன் இறங்கியதும் ராஜகோபாலன். அவர் முடித்து இறங்குகிறபோது மணி ஏழு நாற்பத்தெட்டு.

''அடுத்து மோகனரங்கம்.''

மோகனரங்கன் முள்ளிலிருந்து எழுந்தான்.

'சரியா ஏழரை மணிக்கு நீங்க இங்க இருக்கணும்...'

கடிகாரத்தைப் பார்த்தான். திக்கென்றது. மேடையில் காலை ஊன்றி ஏறுகிறபோது மெலிதான அந்த வியர்வை வாடையும், வெம்மையான வயிற்றுப் பிரதேசமும், இம் இம்மென்று அழுத்தும் மார்புகளும் மனசில் புகுந்து புரண்டன. இப்போது கிளம்பினாலே எட்டு மணியாகி விடும். கால்கள் தொய்ந்தன. பேச்சாளர் மேஜையின் உயரப் பரப்பில் முழங்கைகளை ஊன்றிக் கொண்டான்.

''வெங்கடகிருஷ்ணன் என்ற எழுத்தாளரைப் பற்றி நான் பேசப் போவதில்லை. ஒரு மனித நேசனைப் பற்றிப் பேசப் போகிறேன்.''



ஒரு பஸ் கண்டக்டரிடம் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு விநோதமான விஷயம் தெரிந்தது. தவில் வித்வான்கள் பஸ்ஸில் தவிலை வைத்துக் கொண்டு பிரயாணம் செய்யும்போது அவர்கள் கச்சேரிக்குப் போய்க் கொண்டிருந்தால் தவிலுக்கு 'லக்கேஜ்' உண்டாம். கச்சேரியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தால் லக்கேஜ் இல்லையாம். இது தெரிந்து கொண்ட தவில் வித்வான்கள் எப்போது கேட்டாலும் கச்சேரியிலிருந்து திரும்புவதாகவே சொல்லிவிடுகிறார்களாம்!

—கி. நரசிம்மன்

குரல் சட்டென்று கம்மிற்று. உதடு மெல்லத் துடித்தது. நிமிர்ந்து இரு கரங்களாலும் மைக்கைப் பிடித்துக் கொண்டான். சபையைக் கண்ணீர் மல்கப் பார்த்தான். சட்டென்று முகத்தை இரு கரங்களாலும் மூடி அந்த மேஜையின் மீது கவிழ்ந்தான். உடம்பு குலுங்கிற்று. பளீர் பளீர் என்று கிளம்பிய விம்மலும், கேவலும், மைக் வழியாய்ச் சபையில் வழிந்தன. சபையில் இருந்த இளகின மனங்கள் கண்களைத் துடைத்துக் கொண்டன. துர்வாசன் விடுவிடுவென மேடையில் ஏறி அவனைத் தாங்க, அவன் அவர் மீது சாய்ந்து, சபையைப் பார்த்து இரு கைகளையும் உயர்த்திக் கூப்பினான். துர்வாசன் தோளில் சாய்ந்த வண்ணமே மேடையிலிருந்து இறங்கினான்.

''நான் வீட்டுக்குக் கிளம்பறேன் சார்... எனக்குத் தாங்கலை.''

துர்வாசர் மெல்ல அவன் தோளில் தட்டினார். ஒரு துக்கத் தலையாட்டலைக் காண்பித்தான்.

ஏராளமான மௌன முகங்கள் அங்கே கண் பதித்திருந்தன. அத்தனையும் துக்கத்தில் மூழ்கியிருந்தன. மெல்ல மெல்ல 'உச்' 'உச்' என்று வாய்கள் முனகின.

மோகனரங்கன் மீது அபார பிரேமையும் வசீகரமும் கொண்ட இளைஞர்கள் சிலர் ஒரு துக்கப் பிரமிப்பில் மூழ்கி முணு முணுத்த போது, மோகனரங்கன் வெளியில் வந்து ஸ்கூட்டரைத் தெரு முனை வரை தள்ளிச் சென்று உதைத்துக் கிளப்பினான்.

# தயாரிப்பில் உள்ள சில நாடகங்கள்

*Preview*

நாடக சபாக்கள் கம்மியாக இருக்கிறபடியாலும், டீவியின் பாதிப்பினாலும் மக்கள் நாடகங்களைப் பார்க்க வருவதில்லை என்று குறைப்பட்டுக் கொண்டாலும் புதிய நாடகங்களைத் தயாரிப்பதைக் குழுக்களும் விடுவதில்லை; சபாக்களும் போடாமலிருப்பதில்லை. நாடகங்களைப் பார்ப்பதற்கான மவுசு இருந்து கொண்டு தான் இருக்கிறது. சமீபத்தில் தயாரிப்பிலிருக்கும் நாடகங்கள் என்னென்ன வென்று சில நாடகக் குழுக்களைக் கேட்டபோது அவர்கள் கூறியவை:

● 'காட்டிலே மழை' நாடகப்ரியா குழுவினரின் பத்தாவது தயாரிப்பு. சீனு, விஜி, வித்தியாசமான காதலர்கள். அவர்களின் காதலுக்குத் துணையாக ஒரு பூதம். பெயர் ஜீ பூம்பா. அது சமர்த்தாகக் குழந்தைகளுக்குப் பிடித்தமான வகையில் செயல்படுகிறது. நடிகர் ஜெய்சங்கர் இந்த நாடகத்திற்குத் தன்னுடைய குரலை மட்டும் கொடுத்துள்ளார்! கதை வசனத்தை கோபு, பாபு எழுத, தயாரிப்பு, டைரக்ஷனை சுந்தா எஸ். வி. சேகர் கவனிக்க, அவர்கள் சொன்னது — 'இது ஒரு துணுக்குத் தோரணங்கள் நிறைந்த மசாலா நாடகம்.'





● கிருஷ்ண பரமாத்மாவை முக்கிய பாத்திரமாக்கி அரங்கேறப்போகும் நாடகம் 'மிஸ் கிருஷ்ண பராக்'. கிருஷ்ணன் வேடத்தை சொர்ணலதா ஏற்றிருக்கிறார்.

துவாபரயுகக் கிருஷ்ணன் பாமா கொடுத்த சாபத்தால் கலியுகத்தில் பெண்ணாகப் பிறந்து படும் கஷ்டங்களும், அவள் குடும்பத்தினரைச் சீர்திருத்தப் போய் முடிவில் ஒரு கொலையில் அகப்பட்டு விழிப்பதுமே நாடகத்தின் மூலக் கரு. ஆசிரியர்: ஸ்ரீகவி. துவாபரயுக கிருஷ்ணராக வரும்போது சொர்ணலதாவிற்குப் பின்னணியில் ஆண் குரல் ஒலிக்குமாம்.

● பிரியதர்ஷினி குழுவினரின் புதிய நாடகத்தின் ஆசிரியர் ரமணி.

சந்தர்ப்ப வசத்தால் வேறு வழியின்றித் தந்தை முன்னே ஓர் இளைஞனின் மனைவியாக நடிக்க வேண்டிய மகள்; — ஆசாபாசமுள்ள தந்தை; கணவனாக நடிக்கும் ஹீரோ, நூறு சதம் நல்லவன்.

குமாரி ஆனந்தி, கணேஷ், பிரசன்னா மூவரும் மோத இருக்கிறார்கள் மேடையில்.

பிரச்னைக்குரிய இக்கதையின் க்ளைமாக்ஸ் எப்படி இருக்க வேண்டும்? இதுதான் இப்பொழுது கதாசிரியருக்கும் குழுவினருக்கும் பிரச்னை! மூன்றாவது பிரச்னை நாடகத்தின் தலைப்பு! இன்னும் முடிவாகவில்லையாம்:



டைம் வாழ்க் நாடகத்தில் நாயகன் ஒரு கொலையில் சம்பந்தப்படுத்தப்பட்டு, கூண்டில் நிற்கிறான். ஆனால் அவனோ கொலை நடந்த சமயத்தில் கொலை நடந்த இடத்தில் இல்லை. அவன் இருந்த இடம் ஒரு விபசாரியின் வீடு. இதற்கு ஒரே சாட்சி மிகப் பிரபலமான ஒரு ஜட்ஜ். அவரோ தான் விபசாரி வீட்டில் இருந்ததை வெளிப்படையாகச் சொல்லத் தயங்குகிறார். சிக்கலான கேஸ்களை எடுத்து வாதாட விரும்பும் அவர் மகள் இந்தக் கேஸையும் எடுத்து நாயகனை நிரபராதி என்று நிரூபிக்கிறாள். வழக்கில் ஜெயித்தாலும் தந்தை ஜட்ஜை ஜெயிக்க முடியவில்லை. ஏன்? அதுதான் நாடகத்தின் கிளைமாக்ஸ்.

காரைக்குடி சொர்ணவேலின் இந்தக் கதையை நாடகமாகத் தயாரித்துக் கொண்டிருப்பதாகக் கூறினார் இயக்குனர் எம். ஆர். ராஜாமணி.



● தலைக்கு மேல் மின் விசிறி சுற்றினால் அது தலையில் விழுமோ என்ற சந்தேகம்; ஆபீஸில் பைல் பிரித்ததும் அதில் சந்தேகம்; வீட்டில் குழந்தை தான் மறந்து வெளியே வைத்துவிட்ட பிளேடை முழுங்கிவிடுமோ என்று சந்தேகம் — இதுதான் யூ. ஏ. ஏ.வின் ''டவுட் தேசிகன்''. சந்தேகம் என்ற நோயை மனோதத்துவ ரீதியில் அணுகியுள்ளார் வியட்நாம் வீடு சுந்தரம். பிரதான நடிகர், நாடக இயக்குனர் ஒய். ஜி. மகேந்திரன்.

● 'உரிமைக்குக் குரல் கொடுப்போம்' நாடகத்தின் அடிப்படை வேலையில்லாத் திண்டாட்டம். இரு சகோதரரில் ஒருவன் வேலை இல்லாமல் இருக்கிறான். மற்றொருவன் யூனியனில் சேர்ந்து அதன் தலைவனாகி விடுகிறான். வேலையில்லாத் தம்பிக்கு வேலை கிடைப்பதற்கு அண்ணனின் யூனியனே தடையாக நிற்கும் சூழல் உருவாகிறது. நகைச் சுவையுடன் கதாசிரியர் ராது எழுதியுள்ள சீரியஸ் கதை. கதாநாயகனாக நடிப்பவர் விஸ்வநாதன்.

தொகுப்பு: சலன்



● டெல்லி கணேஷின் அடுத்த நாடகத்துக்கு நாடகாசிரியர் ரமணி!

வக்கீல் கணேஷ் பாத்திரத்தில் டெல்லி கணேஷ். காதலிக்கும் பெண்ணை, சகோதரியாக ஏற்கவேண்டிய நிலை. டெல்லி கணேஷ்—ஸ்ரீலேகாவுக்குச் சவாலாக எழுதப்பட்ட ஒரு கனமான நாடகம் — டைவோர்ஸ்.

''மல்லிகைப் பூ வாங்கிக் கொடுங்கன்னு மனைவி கேட்டா எவ்வளவு முழம்னு ஆசையா மனைவியைக் கேட்காம முழம் எவ்வளவன்னு பூக்காரியைக் கேட்டுக் கணக்குப் பார்க்கிற பருஷன் நீ!'' - மாதிரிக்கு ஒரு டயலாக்.



## அத்தியாயம் 41

# மறைந்த சுழல்

ஆடி மாதம். மேலக் காற்று விர் விர் என்று அடித்துக் கொண்டிருந்தது. மரங்களின் கிளைகள் அந்தக் காற்றில் பட்ட பாட்டைச் சொல்லி முடியாது. நாலா பக்கமிருந்தும் 'ஹோ' என்ற இரைச்சல் சத்தம் எழுந்தது.

பூங்குளம் கிராமம் ஜலத்திலே மிதந்து கொண்டிருப்பது போல் காணப் பட்டது. ஆறுகளிலும் வாய்க்கால் களிலும் புது வெள்ளம் இரு கரை களையும் தொட்டுக் கொண்டு சுழிகள் நுரைகளுடன் அதி வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. வயல்கள் எல்லாம் தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண் டிருந்தன. நாற்றங்கால்களில் இளம் நாற்றுக்கள் கொழு கொழுவென்று பசு மையாய்ப் படர்ந்து இருந்தன. அப் பயிரின் மீது சில சமயம் காற்று வேக மாய்ச் சுழன்று அடித்தபோது விதவித மான சுழிகளும் கோலங்களும் தோன்றி மறைந்தன.




தடாகங்களில் நீர் நிறைந்து அலை மோதிக் கொண்டிருந்தன. தாமரை யும் அல்லியும் புத்துயிர் பெற்று, தள தளவென்று விளங்கிய புதிய இலைகளை யும் மொட்டுக்களையும் விட்டுக்கொண் டிருந்தன. அங்கொன்றும் இங்கொன்று மாக மலர்ந்திருந்த தாமரைப் பூக்களை மேலக் காற்று படாத பாடு படுத்திற்று.

மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும்கூடப் புது வெள்ளம் வாழ்க்கையில் புதிய உற் சாகத்தை ஊட்டி யிருப்பது போல் காணப்பட்டது. எருமை மாடுகள் தளர்ந்த நடையுடன் வந்துகொண் டிருந்தவை, நீர் நிரம்பிய தடாகத் தைப் பார்த்ததும் அதி வேகமாய்ப் பாய்ந்து வந்து தண்ணீரில் அமிழ்ந்தன. கொக்குகள் கூட்டம் கூட்டமாய்ப் பறந்து வந்து குளக்கரைகளில் புதி தாய் முளைத்து வரும் கோரை களுக்கு மத்தியில் உட்கார்ந்து மௌனானந்தத்தில் ஆழ்ந்து விட்டன. பசுமையான கோரைகளுக்கிடையில் அந்தத் தூய வெண்ணிறக் கொக் குகள் நின்ற நிலையும் அவற்றின் நிழல் கீழே தண்ணீரில் பிரதிபலித்த தோற்றமும், ஆகா! எப்பேர்ப்பட்ட கை தேர்ந்த சித்திரக் காரன் எழுதிய சித் திரமோ இது என்று நம்மை அதிசயிக்கச் செய்கின்றன.

* * *

கல்யாணி பூங் குளத்துக்கு வந்து வண்டியை விட்டு இறங்கி, வீட் டுக் குள் போனாளோ இல்லையோ உடனே குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்

கொண்டு, ''அத்தை! நான் ஆற்றங்கரைக்குப் போய்க் குளித்து விட்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினாள். ''என்னடி, அம்மா, இது? நாளைக்குப் போய் ஆற்றில் குளித்தால் போதாதா? இன்றைக்கே அவசரமா? மேலக்காற்றோ இப்படிச் சூறாவளியாய் அடித்துக் கொண்டிருக்கிறது. இந்தக் காற்றில் போனால் உடம்புக்குத்தான் ஆகுமா? நான் தனியாயிருக்கும்போது நீ ஏதாவது உடம்புக்கு வருவித்துக் கொண்டு படுத்துக் கொண்டு விடாதே! என்னால் ஆகாது'' என்றாள் அத்தை.

''நன்றாயிருக்கிறது! ஆற்றிலே புது வெள்ளம் வந்திருக்கும்போது யாராவது வீட்டில் வெந்நீரில் குளிப்பார்களா? நான் மாட்டேன்'' என்று சொல்லிவிட்டுக் கல்யாணி கிளம்பிச் சென்றாள்.

நேரே அவள் பாழடைந்த கோவிலுக்குத்தான் சென்றாள் என்று சொல்லவும் வேண்டுமா? இந்தத் தடவை அவள் ஏமாற்றமடையவில்லை. மரத்தடியில் மேடை மீது முத்தையன் தலையில் கட்டிய முண்டாசுடன் உட்கார்ந்திருந்தான். அவனுடைய முகத்தில் குதூகலம் குடி கொண்டிருந்தது. கல்யாணியைப்பார்த்ததும் அவன் ''ஸ்ரீமதி கல்யாணி அம்மாள்! வரவேணும்! தங்களை எதிர்நோக்கிக் கொண்டுதான் இன்று காலை ஆறு மணியிலிருந்து காத்திருக்கிறேன்'' என்றான்.

கல்யாணி ஆனந்த பரவசமானாள். திடீரென்று தனக்கு இறகுகள் முளைத்து ஆகாயத்தில் பறப்பது போன்ற உணர்ச்சியடைந்தாள். சென்ற நாலு வருஷ காலத்தில் முத்தையன் ஒரு தடவையாவது இவ்வளவு சந்தோஷமாக அவளை வரவேற்றது கிடையாது. கல்யாணியின் கல்யாணப் பேச்சு ஆரம்பத்திலிருந்து அவர்களுக்குள் கோபமும் தாபமும் தான் அதிகமாயிருந்தன அல்லவா?

''நான் இன்று உன்னைப் பார்ப்பது அதிர்ஷ்டவசம்தான். இத்தனை நேரம் திருப்பதிக்குக் கிட்டத்தட்ட நான் போயிருக்க வேண்டியது'' என்றாள் கல்யாணி.

''ஓகோ! அதென்ன சமாசாரம்? இதோ இந்த அக்கிராசன பீடத்தில் அமர்ந்து எல்லாம் விவரமாகச் சொல்ல வேணும்'' என்றான் முத்தையன். அவளுடைய குடத்தை வாங்கிக் கீழே

# கள்வனின் காதலி



வைத்து, அவளையும் அந்த மேடையில் உட்காரச் செய்தான்.

* * *

கல்யாணி அன்று நடந்ததையெல்லாம் ஒருவாறு சொன்னாள். ராயவரம் ஸ்டேஷனில் ரயிலுக்காகக் காத்துக் கொண்டிருந்த போது, முத்தையனைப் பற்றிய பேச்சு காதில் விழுந்ததையும், ''கொள்ளிடக் கரைக்குத்தான் வந்திருப்பான்'' என்ற வார்த்தையைக்

கேட்டவுடனே தான் திருப்பதிக்குப் போகாமல் திரும்பி வந்து விட்டதையும் கூறினான்.

''கல்யாணி! உன்னுடைய 'இப்பேர்ப்பட்ட அன்புக்கு நான் எந்த வகையில் தகுந்தவன் என்றுதான் தெரியவில்லை. உன்னுடைய அன்பைக் கூட ஒரு சமயம் நான் சந்தேகித்தேனே! அதை நினைத்தால் ஆச்சரியமாயிருக்கிறது'' என்றான் முத்தையன்.

கல்யாணிக்கு அப்போது ரயில்வே ஸ்டேஷனில் காதில் விழுந்த இன்னும் சில விஷயங்கள் ஞாபகத்துக்கு வந்தன. அவள் முகத்தில் உடனே துன்பக் குறி தோன்றிற்று.

''அதெல்லாம் சரிதான்; ஆனால்...'' என்று கேட்க ஆரம்பித்தவள், தயக்கமடைந்து நிறுத்திவிட்டாள்.

''என்ன? என்ன?'' என்று முத்தையன் கேட்டான்.

கல்யாணி பேச்சை மாற்றி, ''ரயிலேறுகிற சமயத்தில் நான் வரவில்லையென்று சொல்லி விட்டேனல்லவா? அப்பாவும் சின்னம்மாவும் என்ன நினைத்தார்களோ தெரியாது. என்னைப் பைத்தியம் என்றே முடிவு கட்டியிருப்பார்கள். ஸ்டேஷனில் இருந்தவர்கள் கூட என்னைப் பார்த்துச் சிரித்திருப்பார்கள்'' என்றாள்.

''இவ்வளவுதானே, கல்யாணி! நாம் இரண்டு பேரும் பைத்தியங்கள் தான் பைத்தியங்களாகவே இருப்போம். சிரிக்கிறவர்கள் எல்லாம் சிரித்துக் கொள்ளட்டும். இன்னும் கொஞ்ச நாள் தானே சிரிப்பார்கள்? நாம் இருவரும் கப்பலேறி ஆனந்தமாகக் கடல் பிரயாணம் செய்யும்போது அவர்களுடைய சிரிப்பு நம்மைத் தொடர்ந்து வரப் போகிறதா? அக்கரைச் சீமைக்குப் போய் ஆனந்தமாய்க் காலங் கழிக்கும்போதுதான் அவர்களுடைய பரிகாசம் நம் காதில் விழப் போகிறதா?... கல்யாணி! என்னுடைய வேலையெல்லாம் ஆகிவிட்டது. அபிராமியைப் பார்த்து விட்டேன். அவள் சௌக்கியமாய் இருக்கிறாள். அவளைப் பாதுகாப்பதற்கு ஓர் ஆசாமியும் ஏற்பட்டு விட்டான். இனிமேல் நாம் எங்கே வேணுமானாலும் போகலாம். இன்னும் கொஞ்ச நாளைக்கு இங்கே போலீஸ் ஆர்ப்பாட்டம் அதிகமாக இருக்கும். அந்தக் கலவரம் அடங்கும் வரையில் நான் ஜாக்கிரதையாக இருக்க வேணும். அப்புறம் நாம் கப்பலேறிக் கிளம்பி விட்டோமானால், பிறகு எது எப்படிப் போனால் நமக்கு என்ன? சொர்க்க வாழ்வை அடைந்தவர்களுக்கு மண்ணுலகத்தைப் பற்றிக் கவலை ஏன்?'' என்றான்.

மகாராஷ்டிரத்தில் உள்ள வஸாய் என்ற ஊரில் ஒரு 82 வயதுக் கிழவர் இருக்கிறார். இவருக்குக் கண் பார்வை இல்லை. இவர் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டவராம். வறுமையின் காரணமாக இவர் பிச்சை எடுத்து வந்தார். இந்தச் செய்தி அமெரிக்கச் செய்திப் பத்திரிகை ஒன்றில் வந்தது. அமெரிக்காவில் உள்ள ஒரு சமூக நல சங்கம் இந்தக் கிழவருக்கு 51000 ரூபாய் அனுப்பி வைத்தது. 'குவைத்'தில் உள்ள ஒரு கம்பெனி 5000 ரூபாயும் பம்பாய் தொழில் அதிபர் ஒருவர் ஆயிரம் ரூபாயும் கொடுத்தார்கள். இப்போது அந்தக் கிழவர் தம் குடும்பத்துடன் சந்தோஷமாக இருக்கிறார்!
(டெக்கான் கிரானிகிள் நாளிதழிலிருந்து)

— ஆந்திரா ராமச்சந்திரன்




* * *

**பி**றகு சில தினங்கள், கல்யாணிக்கும் முத்தையனுக்கும் சொர்க்க வாழ்வாகவே சென்று வந்தன. அவர்கள் ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தார்கள் என்றே சொல்லலாம். ஆனால் அந்த வெள்ளத்தின் அடியில் ஒரு பெருஞ் சுழல் வட்டமிட்டுச் சுழன்று கொண்டிருந்தது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

## அத்தியாயம் 42

## தண்டோரா

**ரா**யவரம் டவுன் போலீஸ் ஸ்டேஷன் பிரமாத அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது. சென்னைப்பட்டணத்

# பெண்களின் பெரு விருப்பம் பெற்றது...

ஸ்ரீ

குங்குமம் டீலக்ஸ் பொட்டு




ஸ்ரீ காஸ்மெடிக்ஸ் பம்பாய்-400 059

## ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தின் அறக்கட்டளைகள் நிதிக்காக

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஆக்ஞையின் பேரிலும் அனுக்ரஹத்தின் பேரிலும் காஞ்சி காமகோடி மடத்தின் அறக்கட்டளைகளான கல்விக்கூடங்கள், மருத்துவமனைகள் அமைத்தல், கிராமப்புற கோயில்களை ஜீர்ணோத்தாரணம் செய்தல் ஆகிய நற்பணிகளுக்கு நிதி திரட்டுவதற்கு 1983ம் வருஷம் ஏப்ரல் மாதம் 1ந் தேதியிலிருந்து 7ந்தேதி முடிய ஏழு கலை நிகழ்ச்சிகள் கீழ்க்கண்டுள்ள விவரப்படி தி. நகர். ஸ்ரீ கிருஷ்ணகான சபா கலை அரங்கில் நடக்கவிருக்கின்றன.

இந்தப் புனிதமான கைங்கர்யத்தில் எல்லா ஆஸ்திக மக்களும் ஈடுபட்டு ஒரு கணிசமான தொகையைத் திரட்டி ஸ்ரீ மடத்திற்கு நம் காணிக்கையாக செலுத்தி ஸ்ரீ ஆசார்யாளின் அனுக்ரஹத்திற்கு பாத்திரர்களாகுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**ஆர். யக்ஞராமன்**
(ஸ்ரீ கிருஷ்ணகான சபா)

**ஆர். ராஜகோபால்**
(கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ்)
கன்வீனர்கள்

**காமகோடி சங்கர ஸேவா ஸமிதி**

**கலை நிகழ்ச்சிகள்**

**இடம்: ஸ்ரீ கிருஷ்ண கான சபா கலையரங்கம்**

*ஏப்ரல் '83*

1ந்தேதி மாலை 6-00 மணிக்கு
மகாராஜபுரம் சந்தானம் — திருப்பாற்கடல் வீரராகவன் — வேலூர் ராமபத்ரன்

2ந்தேதி மாலை 6-00 மணிக்கு
மதுரை சேஷகோபாலன் — S. D. ஸ்ரீதர் — காரைக்குடி மணி — விஜயக்ராம்

3ந்தேதி மாலை 6-00 மணிக்கு
லால்குடி ஜெயராமன்
லால்குடி G.J.R. கிருஷ்ணன் இரு வயலின்கள்
பாலக்காடு ரகு — N. கோவிந்தராஜன்

4ந்தேதி மாலை 6-45 மணிக்கு
விவேகா ஃபைன் ஆர்ட்ஸ் க்ளப் அளிக்கும்
சோவின் "ஸம்பவாமி யுகே யுகே"

5ந்தேதி மாலை 6-45 மணிக்கு
ரசிக ரஞ்சனா அளிக்கும் மெரினாவின் 'ஊர் வம்பு'

6ந்தேதி மாலை 6-45 மணிக்கு
நேஷனல் தியேட்டர்ஸ் அளிக்கும்
R. S. மனோகரின் "சூரபத்மன்"

7ந்தேதி மாலை 6-45 மணிக்கு
Dr. பத்மா சுப்ரமணியம் அளிக்கும்
"ஜெய ஜெய சங்கரா" நாட்டியம்

***சீசன் டிக்கெட்டுகள் : ரூ. 300, 200, 100***

டிக்கெட்டுகளை ஸ்ரீ கிருஷ்ணகான சபா ஆபீஸிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்

சபா ஆபீஸ் மாலை 6 மணி முதல்
இரவு 8 மணி வரை

**ஆர். யக்ஞராமன்**
**ஆர். ராஜகோபால்**
*கன்வீனர்கள்*

திலிருந்து சாக்ஷாத் டிபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் துரையே வந்திருந்தார். இன்னும் ஜில்லா சூபரிண்டென்டெண்ட் துரையும், இரண்டு டிபுடி சூபரிண்டென்டெண்டுகளும், அரை டஜன் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், ஸப் இன்ஸ்பெக்டர்களும், முப்பது கான்ஸ்டபிள்களும் ஆஜராகி யிருந்தார்கள்.

ஜில்லா சூபரிண்டென்டெண்டு துரை மேஜையிலே ஓங்கிக் குத்திவிட்டுச்சொல்கிறார்: ''நம்முடைய ஜில்லா போலீஸ் படைக்கு இதை விட அவமானம் வேண்டியதில்லை. 'நம்முடைய மானம் போயே போய் விட்டது. சென்னையிலிருந்து டிபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் துரை வந்திருப்பதைப் பார்க்கிறீர்கள் அல்லவா? இன்று 20ந் தேதி. இந்த மாதம் 31ந் தேதிக்குள் திருடனை நாம் பிடித்தேயாக வேண்டும். தெரிகின்றதா?....''

டிபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் சொல்கிறார்: ''திருடன் எடுத்துவந்த மோட்டார் கொள்ளிடம் பாலத்துக்குப் பக்கத்தில் மடுவில் கிடந்து அகப்பட்டு விட்டது. ஆகையால் அவன் இந்தக் கொள்ளிடக் கரையில்தான் எங்கேயோ ஒளிந்திருக்கிறான். கொள்ளிடக் கரைக் காடுகளைச் சல்லடை போட்டுச் சலித்து விடுங்கள். அவனுக்கு யாராவது உதவி செய்பவர்கள் இருக்கத்தான் வேண்டும். யார் மேல் சந்தேகம் ஏற்பட்டாலும் உடனே அரஸ்ட் செய்து விடுங்கள். கொஞ்சம் கூடத் தயங்க வேண்டாம்., தெரிகிறதா?''

பிறகு, டிபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் துரை, ஜில்லா சூபரிண்டென்டெண்டைப் பார்த்து, ''இந்தத் திருடனை உள்ளூரில் துப்பு வைக்காமல் கண்டு பிடிப்பது கஷ்டம். துப்புச் சொல்பவர்களுக்கு ஆயிரம் ரூபாய் சன்மானம் கொடுக்கப்படும் என்று 'டாம்-டாம்' போடச் சொல்லுங்கள்' என்றார்.

* * *

முத்தையன் கொள்ளிடக் கரைக்கு வந்து பத்து நாளைக்கு மேல் ஆகிவிட்டது. அன்று காலை கல்யாணி சமையல் செய்து கொண்டிருந்தாள். அவள் முகத்திலே குதூகலம் குடி கொண்டிருந்தது. சில சமயம் தனக்குத் தானே புன்னகை புரிந்து கொள்வாள். சிலசமயம் தனக்குள்ளேயும் சில சமயம் வாய் விட்டும் பாட்டுப் பாடுவாள். முத்தையனுக்காக நாம் சமையல் செய்கிறோம் என்ற எண்ணமே அவளுக்கு அத்தகைய உற்சாகத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது.

சமையல் செய்த பிறகு கொஞ்சம் சாப்பாட்டைப் பக்குவமாய்ப் பிசைந்து இலையில் கட்டிக் குடத்துள் வைத்துக் கொண்டு அத்தையிடம் குளிக்கப் போகிறேன் என்று சொல்லிவிட்டுக்

---

## பத்திரிகையாளரை ஏமாற்றினார்!

● ராஜாஜி காலமாவதற்கு ஐந்தாண்டுகளுக்கு முன்னால் ஒரு சமயம் கடுமையாய் உடல் நலம் குன்றியிருந்தார். வி. எஸ். ராஜாஜியைப் பார்க்க வந்தார். ராஜாஜி படுக்கையில் அமர்ந்து எதையோ எழுதிக் கொண்டிருந்தார்.



''என்ன ராஜாஜி, உடம்பு முடியாதபோது கூட எதையாவது எழுத வேண்டுமா?'' என்று வி. எஸ். கேட்டார்.

''இந்த வாரம் ஸ்வராஜ்யாவுக்குக் கட்டுரை எழுதுகிறேன்'' என்ற ராஜாஜி இன்னொன்றையும் சொன்னார்:

''இந்த முறை செய்தியாளர்களுடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டேன்.''

சரிதான் யாரோ பேட்டிக்கு வந்தவர்களைத் திருப்பியனுப்பி விட்டாராக்கும் என்றெண்ணினார் வி. எஸ்.

ராஜாஜி தொடர்ந்தார்: ''எல்லாப் பத்திரிகைகளும் நான் காலமாகி விடுவேன் என்று எண்ணி என் வாழ்க்கைக் குறிப்பு முதலியன எழுதித் தயாராக வைத்திருந்தன. நான் ஏமாற்றி விட்டேன்!''

பி. எஸ். ராமையா பாராட்டு விழாவில் வி. எஸ். - தகவல்: வெல்பால்



## அருள்வாக்கு

ரொம்ப ஜலக் கஷ்டம் உள்ள இடத்தில் கிணறு, குளம் வெட்டுவதை ரொம்பவும் பெரிய தர்மமாக ஆதி நாளிலிருந்து சிலாகித்துச் சொல்லியிருக்கிறது. இப்போது ராஜஸ்தான் ஸ்டேட்டில் சேர்ந்து விட்ட ராஜபுதனம் ஒரே பாலைவனப் பிரதேசம் அல்லவா? அங்கே ஏழெட்டு மைல்களுக்கு ஓர் இடத்தில் தான் எவனாவது ராஜாவோ பிரபுவோ கிணறு வெட்டியிருப்பான். ரொம்ப ஆழத்தில் ஆதிசேஷன் தலைவரைக்கும் என்பார்களே, அப்படிப் பாதாளம் வரைக்கும் தோண்டிக் கொண்டே போய்த்தான் இப்படி அபூர்வமாக எங்கேயாவது கிணறு வெட்டியிருக்கும். அந்தக் கிணற்றுக் கட்டைகளில் இந்த மகா பெரிய தர்மத்தை இன்னான், இன்ன ராஜா காலத்தில் பண்ணினான் என்கிற details எல்லாம் ஸம்ஸ்கிருதத்தில் கல்வெட்டுக்களாகப் பொறித்திருக்கும். நம்முடைய ஹிஸ்டரி, கல்ச்சர் இவற்றை 'ஷேப்' பண்ணுவதற்கு ரொம்பவும் உதவியாயுள்ள இந்தக் கல்வெட்டுக்களுக்கு 'வாபீ ப்ரசஸ்தி' என்று பேர். 'வாபீ' என்றால் கிணறு 'ப்ரசஸ்தி' என்றால் புகழ்மொழி. இப்போதும் ராஜஸ்தானியர்களான மார்வாரிகள் — அவர்களுக்கு ஜலக் கஷ்டம் நன்றாகத் தெரியுமாதலால் — கிணறு வெட்டும் தர்மத்தில் விசேஷமாக ஈடுபட்டிருக்கிறார்கள்.

கிராமப் புறங்களில் எல்லாரும் சேர்ந்து குளம் வெட்டலாம். இருக்கிற குளங்களைத் தூர்வாரி சுத்தம் பண்ணலாம். பெரியவன்-சிறியவன் என்றில்லாமல் எல்லாரும் சேர்ந்து பண்ணுவது முக்கியம். கோடீச்வரனானாலும் பண்ணையாரானாலும் அவனும் மண்வெட்டி கொண்டு வந்து போட வேண்டும். சாஸ்திரங்களில் அப்படித்தான் எழுதியிருக்கிறது. அஸ்திவாரக்கல் நாட்டுவது, டேப் வெட்டுவது முதலானதுகள் சாஸ்திரத்தில் இல்லை. எத்தனை பெரியவனானாலும் அவனும் வாஸ்தவமாகவே உடம்பு வேர்க்க மற்றவர்களோடு சரிசமமாகப் பூர்த்த தர்மம் பண்ண வேண்டும். ரதோத்ஸவத்தில் எல்லா ஜாதிக்காரர்களும் ஒன்றாகச் சேர்ந்து வடம் பிடித்து இழுக்கிற மாதிரிதான் இதுவும்.

—ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

கல்யாணி ஆற்றுக்குக் கிளம்புவது வழக்கம். அத்தைக்குக் கண் பார்வை கொஞ்சம் மங்கல். அது இப்போது கல்யாணிக்கு ரொம்பவும் சௌகரியமாயிருந்தது.

சில சமயம் ஆற்றங்கரைக்குக் கிளம்பும்போது கல்யாணிக்குச் சங்கடம் ஏற்பட்டுவிடும். அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து யாராவது வந்து, ''நாங்களும் உன்னுடன் குளிக்க வருகிறோம்'' என்பார்கள். அப்போது திடீரென்று அவள் தன் மனத்தை மாற்றிக் கொண்டு, ''இல்லை அம்மா! நான் இன்று குளிக்க வரவில்லை'' என்று சொல்லிவிடுவாள். அப்புறம் மத்தியானத்துக்கு மேல் தனியாகப் போவாள். அப்படிக் கிளம்புவது தடைபட்டபோதெல்லாம், ''ஐயோ! முத்தையன் காத்திருப்பானே?'' என்று அவளுடைய உள்ளம் துடிதுடித்துக் கொண்டிருக்கும்.

அன்றைய தினம் அவள் சாப்பாட்டைக் குடத்துக்குள் வைத்துக்கொண்டிருந்தபோது வாசலில் தண்டோரா போடும்சத்தம் கேட்டது. கிராமவெட்டியான் பின்வருமாறு கூறினான்: ''கொள்ளைக்கார முத்தையா பிள்ளையைப் பிடிக்கத் துப்புச் சொல்கிறவங்களுக்கு சர்க்காரிலே ஆயிரம் ரூபா சன்மானம் அளிப்பாங்க. (டம்டம்டம்டம்) மேற்படி முத்தையா பிள்ளைக்குச் சாப்பாடு போடறது, தங்க இடம் கொடுக்கிறது, பேசறது, பழகுகிறது எல்லாம் பெரிய குத்தங்களாகும். அப்படிச் செய்யறவங்களைச் சர்க்காரிலே கடுமையாத் தண்டிக்கப் போடுவாங்க. சாக்கிரதை. சாக்கிரதை, சாக்கிரதை!'' (டம்டம்டம்டம்)

* * *

கல்யாணி வழக்கம்போல் அன்றும் இடுப்பில் குடத்துடன் கொள்ளிடத்திற்குக் குளிக்கக் கிளம்பினாள். போகும்போது அவளுடைய உள்ளத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி அலைத்தன. விர்ரென்று வீசிய மேலக் காற்றினால் அவளுடைய சேலையின் தலைப்பு அலைந்ததைக் காட்டிலும் வேகமாகவே அவள் உள்ளம் அலைந்தது. எவ்வளவு எவ்வளவோ ஆபத்துக்களுக்குத் துணிந்து நாம் முத்தையனுக்கு உதவி செய்கிறோம் என்ற எண்ணம் அவளுக்கு எல்லையில்லாத பூரிப்பை அளித்தது. இந்த ஆபத்தெல்லாம் விலகி, முத்தையனும்

தானும் கப்பலேறிச் சென்று நிர்பயமாயும் சந்தோஷமாயும் வாழும் காலம் வருமா என்று எண்ணியபோது, அவளுடைய இருதயம் புயலில் அகப்பட்ட மரக் கலத்தைப் போல் கலங்கியது.

ஆனால், எல்லாவற்றையும் விட, அவளை அதிகமாய்க் கலங்கச் செய்து வந்த எண்ணம் வேறொன்றுகும். தன்னுடைய இத்தனை அன்புக்கும் முத்தையன் பாத்திரந்தானா? — இந்த நினைவு சில சமயம் தோன்றும்போது அவள் சொல்ல முடியாத வேதனை அடைவாள். அன்று ரயில்வே ஸ்டேஷனில், முத்தையனுடைய ஸ்திரீ சகவாசத்தைப் பற்றி அவள் காதில் விழுந்த பேச்சு 'தெள்ளிய பாலில் ஒரு சிறு நஞ்சைக் கலந்தது' போல் அவளுடைத தூய உள்ளத்தின் விஷத்தின் விதையைப் போட்டு விட்டது. ''நம்முடைய முத்தையனா அப்படியெல்லாம் செய்வான்? ஒரு நாளும் இல்லை.!'' என்று ஒரு நிமிஷம் எண்ணுவாள். மறு நிமிஷம் ''பேதைப் பெண்ணாகிய எனக்கு என்ன தெரியும்? புருஷர்கள் எல்லாரும் அப்படித்தானோ என்னவோ? என்னை மோசந்தான் செய்கிறானோ என்னமோ?'' என்று கலங்குவாள். சென்ற பத்து நாளாகவே, இது விஷயமாக முத்தையனிடம் பிரஸ்தாபித்து, அவனிடம் உறுதி பெறவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்தாள். ஆனால் அதற்குத் தைரியம் வராமல் நா எழாமல், நாட்கள் கழிந்து வந்தன. இன்றைக்கு எப்படியாவது அந்தப் பேச்சை எடுத்து முத்தையனிடம் உறுதி பெற்றுக் கொள்ள வேண்டுமென்று வழியில் கல்யாணி தீர்மானம் செய்து கொண்டாள்.

ஆனால், ஐயோ! அந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற அவளுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவே இல்லை. அன்று அவள் பாழடைந்த கோவிலுக்குக் கொஞ்ச தூரத்தில் வந்து கொண்டிருந்தபோது காட்டின் உள்ளிருந்து பேச்சுக் குரல் வருவதைக் கேட்டுத் திடுக்கிட்டாள். இந்த ஆபத்தான நிலைமையில் முத்தையனுடன் யார் வந்து பேச முடியும்? அந்த இடத்திலேயே நின்று மரங்களின் இடைவெளி வழியாக உற்றுப் பார்த்தாள். ஐயோ! இது என்ன காட்சி! பார்க்கச் சகிக்கவில்லையே! முத்தையனுக்கு அருகில் ஒரு ஸ்திரீயல்லவா உட்கார்ந்திருக்கிறாள்! அவளுடைய தளுக்கும் குலுக்கும்! சிரிப்பைப் பார் சிரிப்பை! அழகு சொட்டுகிறது! சீ! முத்தையனுடைய முதுகில் அவள் தட்டிக் கொடுக்கிறாளே! ஐயோ! இது என்ன கோரம்! முத்தையன் திரும்பி அவளைத் தழுவிக்கொள்கிறானே!

கல்யாணிக்கு அந்த நிமிஷத்தில் சித்தப் பிரமையே உண்டாகி விட்டது போலிருந்தது. பார்த்தது பார்த்தபடி சில நிமிஷம் அங்கேயே நின்றாள். பிறகு அங்கே நிற்க முடியாதவளாய் இடுப்பில் குடத்துடன் வந்தவழியே திரும்பிச் செல்லலானாள்.

(தொடரும்)

---

பெர்லின் நகரில் கண் பார்வையற்றவர்கள் சாலையைக் கடப்பதற்கு ஒரு விநோதமான கோல் ஒன்றைப் பயன்படுத்துகின்றனர். இந்தக் கோலில் ரேடியோ அலைகளைப் பதிவு செய்யும் வகையில் சிறு குமிழ் ஒன்று பொருத்தப்பட்டிருக்கும். சாலையில் உள்ள 'சிக்னல்' விளக்கிலிருந்து 'கடக்கலாம்' என்ற சமிக்ஞை விளக்குகள் எரிய ஆரம்பித்தவுடன் அந்த விளக்குகளிலிருந்து புறப்படும் ரேடியோ அலைகள் பார்வையற்றோர் கையில் உள்ள கோலில் பதிவாகி அதனைத் தங்கள்கையில் உணருவார்கள். அதன்பின் அவர்கள் பயமின்றி சாலையைக் கடப்பார்கள். இக்கோலைக் கண்டு பிடிக்க விஞ்ஞானிகள் இரண்டாண்டுகள் இடைவிடாமல் முயற்சி எடுத்தனராம்!

தகவல்: எஸ். வெங்கட்ராமன்



# ராலிஃபேன் விசிறிகளின் உள்ளமைந்த மேம்பாடு இதற்கு உத்தரவாதம் உண்டு




முற்றிலும் சமநிலைப்
படுத்தப்பட்ட இயந்திர
நுணுக்கம் மிக்க
வடிவமைப்பின் காரணமாக,
ராலிஃபேன் ஸூப்பர்ஸ்டார்
தொல்லையின்றி ஓடுகிறது






தொல்லையற்ற ஓட்டம் என்கிற கண்ணோட்டத்தில் பார்க்கிறபோது, ராலிஃபேன் ஸூப்பர்ஸ்டார் இணையற்று விளங்குகிறது. டபுள் பால் பேரிங்குகள் இருப்பதால் மோட்டார் நீண்ட காலம் உழைப்பதோடு, இரைச்சலற்ற ஓட்டம் கிடைக்கிறது. பிளேடுகள் மிக நுணுக்கமாக சமநிலைப்படுத்தப் பட்டிருப்பதால், சீரான காற்றோட்டம் அளிக்கிறது. ஆல்-மெட்டல் ரெகுலேட்டர் என்பதால் நீடித்த உழைப்பு நிச்சயமாகிறது. ஆகவே பணியில் ஈடிணையற்ற விசிறி உங்களுக்குக் கிடைக்கிறது.

ஸூப்பர்ஸ்டார் மீது நம்பிக்கை வையுங்கள். இதன் செயல்திறனுக்கு இணையே இல்லை.

**ராலிஃபேன்**

தரமோங்கிய தயாரிப்புகளுக்கு




**ராலீஸ்**

மல்டி டெக்னாலஜி க்ரூப்

ULKA-RFC-3-82-TM

# அந்த சாம்ராஜ்யமே வெறுந்தான்

ஜெயவண்ணன்



இமரல் ...

அடுப்பிலிருந்த மில்க் பாய்லர் ரவுடித்தனமாக விசிலடித்துக் கூப்பிடவே எரிச்சலுடன் கையிலிருந்த வார இதழை எதிரே டிரேயின் மேல் போட்டுவிட்டு எழுந்து அடுக்களையை நோக்கி நடந்தேன்.

''அம்மா!''

'வீல்' என்ற அலறல்.

சாட்டையடி பட்டவளாய்ச் சரேலென்று நின்றேன்.

கண்ணனின் குரல் போல் இருக்கிறதே! திரும்பினேன்.

நெற்றியிலிருந்து ரத்தம் 'குபுகுபு' என்று வடிந்து கொண்டிருக்க, அடிபட்ட இடத்தைக் கரத்தால் அழுத்தியபடி அழுது கொண்டிருந்தான் அவன். ஸ்கூல் யூனிபாரத்தைக் கழற்றக்கூடவில்லை.

அந்த வெள்ளைச் சட்டை யெங்கும் பட்டு ரோஜாக்களைப் போல் திட்டுத் திட்டாய் ரத்தத்துளிகள்.

''என்னடா கண்ணு?''

பதற்றத்துடன் கேட்டேன்.

''ம்....வந்து... பக்கத்து வீட்டு மாலா சிலேட்டால் நெற்றியிலே அடிச்சுட்டா அம்மா.....''



## அம்மாடியோவ் ஆம்லெட்!

பிரான்சில் உள்ள விக்கி என்னும் கிராமத்தில்தான் உலகத்திலேயே மிகப் பெரிய ஆம்லெட் தயாரிக்கப்பட்டது. பன்னிரண்டு சமையல்காரர்கள் இந்த ஆம்லெட்டை அவ்வூரில் நடைபெற்ற திருவிழாவுக்காகத் தயாரித்தார்கள். இதற்குப் பயன்படுத்தப்பட்ட முட்டைகள் 7200; வெண்ணெய் 110 கிலோ!

ஆதாரம்: பவுல்ட்ரி அட்வைசர்
தகவல்: கன்விசா

தேம்பிக் கொண்டே சொல்லி முடித்தான்.

பாத்ரூமில் அவனைச் சுத்தமாகக் கழுவி விட்டு ஈரத்துணியை நெற்றியில் கட்டிவிட்டு வேறு சட்டை போட்டேன்.

நெற்றியில் கட்டியிருந்த வெள்ளைத் துணி மெல்லக் கட்சி மாறிக் கொண்டிருந்தது.

ரத்தக் கசிவு நிற்கவில்லையே!

என்ன செய்வது?

''வித்யா!'' — அவர்தான். ஆபீஸிலிருந்து வந்து விட்டார்.

என்னையும் கண்ணனையும், பின் அவன் தலையில் கட்டியிருந்த கட்டையும் பார்த்தவர் பதறிவிட்டார்.

''என்ன வித்யா, என்ன ஆச்சு?''

விஷயத்தைச் சுருக்கமாகச் சொன்னேன். பின்,''நீங்க உடனே இவனை டாக்டர்கிட்டே கூட்டிக்கிட்டுப் போங்க. ரத்தம் ரொம்பக் கசிந்து கொண்டே இருக்கு.'' என்றேன்.

''சரி, வாடா.''

கையிலிருந்த பையை என்னிடம் கொடுத்து விட்டு அவனுடன் வெளியே நடந்தார்.

அவர்கள் சென்றதும் நான் வெளியே வந்தேன்.

எதிர் ஃப்ளாட் கதவு சாத்தியிருந்தது.

அருகே சென்று, எரிச்சலுடன் காலிங் பெல்லை அழுத்தினேன்.

கதவு திறந்தது.

சரசு.... அவள் அருகே மாலா....

''சரசு, உன் மகள் செய்த காரியத்தைப் பார்த்தாயா?''

''என்ன செஞ்சா?''

''என் மகன் கண்ணனின் நெத்தியிலே சிலேட்டாலே ஓங்கி அடிச்சிருக்கா. பெரிய காயம். சட்டை பூராவும் ஒரே ரத்தம். அவரு அவனை டாக்டர் கிட்டே கூட்டிக்கிட்டுப் போயிருக்கார்.''

''அப்படியா?''

''ஆமாம்'' என்ற நான், மாலாவைப் பார்த்தேன்.

குற்றம் செய்த நெஞ்சம் குறுகுறுக்க, குதிரை வால் போல் இரண்டு சடைகளும் இரண்டு பக்கமும் ஊஞ்சலாட, சரசுவின் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தாள் அவள்.

''ஏண்டி அவனை அடிச்சே?'' என்று கேட்டுக்கொண்டே அவளை இழுத்து 'நறுக்' கென்று அவள் தலையில் ஒரு குட்டு வைத்தேன்.

அவ்வளவுதான்.

'ஓ'வென்று முகாரி ஆலாபனை ஆரம்பமாக....

அழும் மாலாவையும் என்னையும் மாறி மாறிப் பார்த்த சரசு, ''சின்னப் பிள்ளை தானே? அதுக்கு என்ன தெரியும்?'' என்றாள் மெல்லத் தயங்கிக் கொண்டே.

''என்ன தெரியுமா? என் பிள்ளையோட மண்டையை உடைக்கத் தெரியும்....''

பொருமினேன்.

''அதுக்காக இப்படியா தலையிலே குட்டுவது?''

''பின்னே கொஞ்சச் சொல்றியா?''

என் பதில் 'நறுக்'கென்று அவள் மனத்தில் முள்ளாய்த் தைத்திருக்க வேண்டும்.

''என் பிள்ளையை யாரும் கொஞ்சணும்னு நான் எதிர்பார்க்கலே'' என்றாள் சரசு நறுக்கென்று.

''கருவேப்பிலைக் கன்றைப் போல, ஒன்னே ஒன்னு கண்ணே கண்ணுன்னு வச்சிருக்கேன். பாவி, அந்தப் பிள்ளையோட மண்டையை உடைச்சுட்டாளே!''

''நான் மட்டும் என்ன ஒன்பதா வைச்சிருக்கேன்? எனக்கு இருக்கிறதும் ஒன்னே ஒன்னுதான்....''

''மேலே வேண்டாம்னு நானு தடுத்தேன்?''

''இதே பதிலை நானும் திருப்பிச் சொல்லலாமே.''

''சரசு, நிதானமாகப் பேசு.''

கோபத்தில் சீறினேன்.

அவள் நிதானமாகப் பதில் சொன்னாள். ''நானும் அதைத்தான் சொல்றேன்.''

''என் பிள்ளைக்கு நடந்த மாதிரி உன் பிள்ளைக்கு நடந்திருந்தா நீ இப்படிப் பேச மாட்டே.''

''தப்பு யார் மேலேன்னு கேட்டியா?'' என்ற சரசு, ''ஏன்டி மாலா, நீ ஏன் அவனை அடிச்சே?'' என்று நீதி விசாரணையைத் தொடங்கினாள்.

''அவன்தான் என் காதைப் பிடித்து முதலில் கிள்ளினான்....''

என்னை ஓரக் கண்ணால் பார்த்துக் கொண்டே தேம்பிக்கொண்டே பதில் சொன்னாள் மாலா.

''அதுக்காக ரத்தம் வர்றாப்போல் அடிச்சுடறதா?''

கோபமாகக் கேட்டேன்.

''அடிச்சது என்னவோ உண்மைதான்... அடி வேகமாப் பட்டிருக்கும் ரத்தம் வந்துடுத்து...''

சமாதானக் கொடியைப் பறக்க விடத் தொடங்கினாள் சரசு.

நான் இறங்கி வரத் தயாராக இல்லை.

''ஓகோ! அப்படின்னா உன் பொண்ணு மேலே தப்பே இல்லேன்னு சொல்றியா?''

''நடந்ததைப் பார்க்கும்போது அப்படித்தான் தோணுது....''

''காக்கைக்குத் தன் குஞ்சு என்றைக்கும் பொன் குஞ்சுதான். உன் பொண்ணு தப்பு செய்தா நீ என்றைக்கும் ஒத்துக்கவே மாட்டியே?''

''அங்கே மட்டும் என்ன வாழுதாம்? உன் பிள்ளை தப்பு செய்தா நீ என்றைக்கு ஒத்துக்கிட்டு இருக்கே?''

''ம்.... எல்லாம் என் நேரம். கண்ட கண்டவங்க கிட்டே பேச்சு வாங்க வேண்டியிருக்கு. உன் கிட்டே வந்து நியாயம் கேட்க வந்த எனக்கு இதுவும் வேணும்... இன்னமும் வேணும்... என் புத்தியைக் காலில் இருக்கிற தாலேதான் அடிக்கணும்....''

''இதோ பார் வித்யா. அதுக்கெல்லாம் எனக்கு இப்போ நேரமில்லே. நான் வர்றேன்.''

சரேலென்று உள்ளே போய் விட்டாள் சரசு. அவளைத் தொடர்ந்து அந்தக் குதிரை வாலும் உள்ளே போய்ப் புகுந்துகொண்டது.

மாலா இனிமேல் கண்ணனோடு பழகக் கூடாது. சரசுவோட நட்புக்கும் முற்றுப் புள்ளி.

சிறிது நேரத்தில் என் கணவரும் கண்ணனும் வந்தார்கள்.

''டாக்டர் என்னங்க சொன்னார்?''

''சின்னக் காயம்தான். மருந்து வச்சுக் கட்டியிருக்கார். ரெண்டு நாளிலே ஆறிடுமாம்....''

நான் கண்ணனைப் பார்த்தேன்.

''டேய் நீ இனிமே அந்த மாலாக் குட்டியோட சேர்ந்து விளையாடக் கூடாது. அப்படி விளையாடறதை நான் பார்த்துட்டா, உன் தோலை உரிச்சு உப்புப் போட்டு வெயிலில் காயப்போட்டு விடுவேன்....''

''அப்புறம் அதை என்ன செய்வே?''

அடிக்கத் தாவினேன். என் கரங்களில் சிக்காது வளைந்து வளைந்து ஓடிவிட்டான்.

புத்தம் புதிய டிக்காக்ஷனை இறக்கி, ஆவி பறக்கும் காப்பியைக் கொண்டு வந்து என் கணவரின் முன் வைத்து விட்டு நிமிர்ந்தேன்.

கண்ணனைக் காணோம்.

எங்கே போயிருப்பான்?

கதவருகே வந்து எட்டிப் பார்..த்..தேன்.

அங்கே—

கண்ணன் மாடிக்குச் செல்லும் படிகளில் அட்டகாசமாகக் கால்களை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க, அவனருகே அசோக வனத்து சீதையாய் அந்தக் குதிரைவால் உட்கார்ந்திருக்க.....

''ரொம்ப வலிக்குதாடா கண்ணு?''

''இப்போ இல்லே. நீ அடிச்சப்போ வலிச்சது. இப்போ சரியாயிட்டுது.''

''என் மேலே கோபமா?''

''இல்லே மாலா. இனிமே அடிச்சா ரத்தம் வர்றாப்பலே வேகமா அடிக்காதே. மெதுவா அடி....''

''சரிடா....''

அவள் சிரிக்க.... அவன் சிரிக்க....

பிரமை பிடித்தவளாய் நான் அப்படியே நின்று கொண்டிருந்தேன்.

**ஆசிரியர்: உங்க அப்பா மளிகைக் கடை வைத்திருக்கிறாரா?**

**மாணவன்: அடடே உங்களுக்கு எப்படி சார் தெரிஞ்சது?**

**ஆசிரியர்: இரண்டாம் குலோத்துங்கன் என்று எழுதுவதற்கு இரண்டாம் கிலோத்துங்கன்னு எழுதியிருக்கியே!**

- எஸ். ராஜேந்திரன்



சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

ஸ்தாபிதம் : 1942

தலைமை ஆபீஸ் : **கும்பகோணம்-612001 (தமிழ்நாடு) (போன் : 123)**

டிரக் லைசென்ஸ் நெ. 40/31-8-78

ஈட்டுத் தொகைக்கு மத்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது

உங்களுக்குத் தேவையான **ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்**

எமது விசேஷ தயாரிப்புகள் :

**கேசத்தின் பராமரிப்புக்கு இரு தைலங்கள்**

**மதுயஷ்டி தைலம்**

தலைமயிர் உதிர்வதை நிறுத்தி கேசத்தை அபரிமிதமாய் வளரச் செய்யும்

**நீலிபிருங்கா மலகம்**

அகால நரையைப் போக்கி தலைமயிரை கருமையாக வளரச் செய்யும்

எமது பிராஞ்சுகள் :

1. லலிதா பார்மஸி, 52-A, மஹாதானத் தெரு, மாயூரம்-609001 போன் : 379
2. லலிதா பார்மஸி, 81, வடக்கு வீதி, சிதம்பரம்-608001
3. லலிதா பார்மஸி, 39, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600017 போன் : 441454
4. லலிதா பார்மஸி, 105, கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-600004 போன் : 73007

உங்கள் உபாதைகளுக்கு டாக்டர் **V.R.L.** சர்மா அவர்களிடம் நேரிலோ அல்லது பதிலுக்கு (50Np தபால் தலை அனுப்பி) கடிதம் மூலமோ தலைமை ஆபீசுடன் தொடர்பு கொள்ளவும். கடிதங்களை தமிழில் அல்லது இங்கிலீஷில் Type செய்தோ அல்லது மிகத் தெளிவாகவோ எழுதக் கோருகிறோம். கடிதங்களிலும் முக்கியமாய் கார்டிலும் ரொம்பவும் நுணுக்கமாய் எழுத வேண்டாம் எனக் கூறுகிறோம். "தெளிவில்லாமலும், பதிலுக்கு **50Np** ஸ்டாம்ப் அனுப்பாமலும் வரும் கடிதங்களுக்கு பதில் எழுதப்பட மாட்டாது".

# சென்னை - பழனியில் சிகிச்சை



பெறுங்கள், உலக புகழ் பெற்ற பழனி சித்த வைத்தியர்

**Dr. S. காளிமுத்து,** R.M.P. (IND) V.V.C., A.M.I.H., R.A.M.P., R.H.M.P.,

அவர்களின் சுற்றுப்பயணத்தில் அல்லது பழனியில் நேரில் சந்தித்து ஆலோசனை பெற்று இதுவரை கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுகவாழ்வு பெறலாம்! உங்கள் பிரச்சனையான — தாம்பத்திய வாழ்வில் மாறுபாடு — சோர்வு — அணுக்கள் குறை — வீரியமின்மை-குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை நரம்பு துவளல்-தேக உறுப்புகள் மெலிவு-கெட்ட கனவுகள்-தூக்கம் இல்லாமை-குழந்தை செல்வம் இல்லாமை-வெட்கம்-நடுக்கம்-தோல்வி-ஆ. இருமல்-வாதநோய் — சருமநோய் — குடல்புண் — வயிற்று கோளாறுகள் — நவமூல வியாதிகள் மற்றும் இதர வியாதிகளும் 85 வருட அனுபவ மருந்துகள் பெற்று சுக வாழ்வும் - மறுமலர்ச்சியும் பெறலாம்.

---

**சென்னை விஜயம் :** *தேதிகள் 10-11 & 17-18-19*

**நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்,** எட்வேர்ட்ஸ் எலியட்ஸ் ரோடு, சென்னை-4 போன்: 83111

---

பழனியில் : 23ந் தேதி முதல் 31ந் தேதி வரை தலைமை ஆபீஸ்—

**பழனி சித்தர் வைத்தியசாலை,** (Regd) பழைய தாராபுரம் ரோடு, பழனி-1

போன் : 316 — 316A வீடு : 420 தந்தி : 'சித்தர்'

---

சென்னை — பழனி ஆலோசனை நேரம் : காலை 10 to 12 மணி மாலை 3 to 5 மணி வரை மேலும் நேரில் ஆலோசனை பெற: 13-ந் தேதி: சேலம்-லக்ஷ்மி ராஜ்பவன், மாலை 2 to 4 மணி, 15-ந் தேதி : ஈரோடு-நவபவனம், காலை 10 to 12 மணி, திருப்பூர்-ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ் பகல் 2 to 3½ மணி, 16ந்தேதி கோவை, விஜயா லாட்ஜ் காலை 10 to 12 மணி 22ந்தேதி கோவை, ஹோட்டல் குரு, காலை 10 to 12 மணி 22ந்தேதி பொள்ளாச்சி கோபால் பில்டிங், மாலை 2 to 3½ மணி 23ந்தேதி பெரியகுளம் உடுப்பி லட்சுமி விலாஸ் காலை 8 to 10 மணி, தேனி பாண்டியன் லாட்ஜ், பகல் 11 to 1 மணி, கம்பம் புளிவர்ஸ் லாட்ஜ் பகல் 2 to 4 மணி, 24ந்தேதி மதுரை சந்தானம் லாட்ஜ் காலை 8 to 12 மணி, 24ந்தேதி விருதுநகர் ஹோட்டல், ஆஞ்சநேயா பகல் 2 to 4 மணி, இராஜபாளையம் ஆனந்தா லாட்ஜ், மாலை 5 to 6 மணி.

---

எமது மருந்துகள் கிடைக்குமிடம் : **கவிதா எண்டர்பிரைசஸ்,**

26, வாலர்ஸ் ரோடு, (மவுண்ட்ரோடு, பி.ஆர். & ஸன்ஸ் அருகில்) சென்னை-2




● பார்வையற்ற மாணவர்கள் சார்பில் இரு விண்ணப்பங்கள். (1) எம்மைப் போன்றோருக்குப் பாடப் புத்தகங்களைப் படித்துக் காட்டி உதவப் பலரும் முன்வர வேண்டும். (2) பார்வையற்றவர்களுக்கென்று இலகுவான இஞ்ஜினீரிங் நிறுவனம் ஒன்று தொடங்கிப் பயிற்சியும் வேலை வாய்ப்பும் தரத் திட்டம் உள்ளது. தொழிலதிபர்கள் அழைக்கப்பட்டு இங்கு பணியாற்றுவோரின் ஆற்றலை நேரில் பார்த்துத் தங்கள் நிறுவனத்துக்கு வேலைக்கு எடுத்துக்கொள்ளலாம். அம்பத்தூர் எஸ்டேட்டில் இதற்கென சிறு தொழில் கூடம் எமக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. இக்கூடத்துக்கு இயந்திரங்கள் கொடுத்து உதவலாம், நன்கொடை வழங்கலாம், அல்லது எம்மால் தயாரிக்கக் கூடிய பொருள்களுக்கு ஆர்டர் கொடுக்கலாம். நன்றி.

பி. மனோகரன்
Executive Officer
National Federation
of the Blind
64, Avadi Road,
Madras-600 056

● உமாபதியின் கைவண்ணத்தில் உருவான அட்டைப் படக் கார்ட்டூன் சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்தது.

திருவையாறு ஜி. நரசிம்மன்

● தங்களது கல்கியை சிகரெட் பிடித்துக் கொண்டே புரட்டிக் கொண்டிருக்கையில், கடைசிப் பக்கத்தில் மறைந்த மாமேதை ராஜாஜி அவர்களின் கடிதத்தைப் பாதி படித்துக் கொண்டிருக்கையிலேயே பாதி சிகரெட்டைத் தூர எறிந்து விட்டேன். காரணம் அவர் என்னிடம் நேரில் கூறுவது போலிருந்தது. அந்த நிமிடம் முதல் புகை பிடிக்கக் கூடாது என்று இருக்கிறேன். (ஒரு நாளைக்கு மூன்று பாக்கெட் விதம் பிடிப்பவன் நான்)

சென்னை-64 எம்.கே. பார்த்தசாரதி

● நீங்கள் கேட்டவை (9–1–83 இதழ்) தொடர்பாக:

கல்கியில் வெளியான பதில் ஆசார்யாளின் பார்வைக்குச் சமர்ப்பிக்கப்பட்டபோது அவர் கீழ்க் காணும் கருத்தைத் தெரிவித்தார்:

''மக்கள் யாரை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கலாம். யாரையாவது ஒருவரை அவர்கள் தேர்ந்தெடுத்த பின்னர், அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவருக்கு எப்போதும் இடைஞ்சல் செய்து வந்தால் அந்தக் குறிப்பிட்ட நபர் சரியாகச் செயலாற்றவே முடியாது. ஆகவே மக்கள் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நபருடன் தங்கள் நலனுக்காகவாவது, ஒத்துழைக்க வேண்டும். அந்த நபர் விஷயத்தில் மக்களுக்கு அதிருப்தி ஏற்படுமாயின் அவர்கள் தக்க சமயத்தில் வேறொருவரைத் தேர்ந்தெடுக்கலாம்.''

இக்கருத்தை மனத்தில் வைத்துத்தான் ஜகத்குரு 'பிரதம மந்திரியின் கரத்தை வலுப்படுத்துதல்' என்பது பற்றிக் கூறினாரே தவிர திருமதி இந்திரா காந்தியை மட்டும் குறிப்பதாக அர்த்தமாகாது.

சென்னை-600 004 உமேஷ்
24–2–83 (ஜகத்குரு சங்கராச்சாரியார் ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடம் அவர்களின் பத்திரிகை காரியதரிசி)

● நாகர்கோயில் சம்பவத்தை நியாயமான பார்வையில் பார்த்து மக்களின் பொதுக் கருத்தை வெளியிட்டவர்கள் சட்டசபையில் பார்வர்ட் பிளாக் கட்சித் தலைவர் ஆண்டித் தேவரும் தாங்களும் தான்.

மே. தாம்பரம், 'தூண்டில்' குருசிவகுமார்

● ''ஐயோ பாவம் உண்ணாவிரத''த்தினால் அரசியல்வாதிகளின் வண்டவாளத்தை அப்படியே தண்டவாளத்தில் ஏற்றி விட்டீர்கள்.

அதிராம்பட்டினம் கே. எம். எஸ். இஜார் முகம்மது

● முகூர்த்தத்துக்கும் பிரம்மச்சாரிகளுக்கும் முடிச்சுப் போட்டு எழுதப்பட்ட இரட்டை விமர்சனம் புதிய பாணியில் அமைந்திருந்தாலும் பெரும்பாலும் பிரம்மச்சாரியே தாக்கப்பட்டிருப்பது ஏன்? பிரம்மச்சாரிகள் மனம் வைத்தால்தான் சுபமுகூர்த்தங்களே நடைபெறும் என்பதை மறந்து விட்டீரா?

சென்னை-14 ஐயாறு எஸ். வாசுதேவன்.

● மகா கவி பாரதியார் நூற்றாண்டு விழா போட்டியின் வரிசை 8ல் சரியான விடை எழுதியவர்களின் பட்டியல் சரமாரியாகப் பொழிந்து தள்ளுவது அறிந்து வியப்பும் விம்மிதப் பெருமிதமும் அடைந்தேன். அணி திரளும் அத்தனை பெயரையும் வெளியிடுவதற்கு வாசகர்கள் சார்பில் நன்றி.

திருவண்ணாமலை பேராசிரியர் பகவத்சிங்

## அத்தியாயம் 9

இரண்டு விஷயங்களைச் சொன்னான் காயத்ரி.

''உன் பதற்றத்தைக் குறைச்சுக்கணும். அம்பத்தெட்டு வயசுக்கு இது நல்லதில்லை. எனக்குக் கவலையா இருக்குப்பா. அதனால சொல்றேன்....''

''சொல்லு. இன்னொரு விஷயம் என்ன?''

''உனக்கு ஒரு லெட்டர் வந்திருக்குப்பா.''

''போஸ்ட்லேயா?''

''ஒட்டாத கவர்ல உன் க்ளாஸ் பையன் கொண்டு வந்து குடுத்தான். யாரோ வடிவேல்னு ஒரு ஓல்ட் ஸ்டூடண்ட் எழுதியிருக்கார். உனக்கு மெட்ராஸ்ல வேலை போட்டுத் தராராம். ஐநூறு ரூபா சம்பளம். நீ ஒத்துக்கறது நல்லது.''

''இன்னுமாம்மா வேலை...''

''எனக்காகவோ உனக்காகவோ இல்லை. அக்காவுக்காக. சமைக்க மட்டும்தான் அவளுக்குத் தெரியும். எத்தனை நாளைக்கு வீட்டோட வச்சிண்டிருக்க முடியும்? அவளுக்குக் கல்யாணம் பண்ற வரைக்கும் நீ உழைக்கணும்.''

''அப்புறம் நீ இருக்கே. உன் தங்கை இருக்கா.''

குடித்தான். நாணு சார் உள்ளே நுழைந்த நேரத்தில் உச்சத்தில் இருந்தான்.

''ஐயா வாங்க வாங்க. ஒரு வரி வரேன்னு எனக்கு எழுதப்படாதா'' என்றபடி தடுமாறி எழுந்தவன் மேஜையை இடறி, நாற்காலியை உருட்டி, நாணு சார் காலில் விழுந்தான். விழுந்தவனை எழுப்பி உட்கார வைக்க இரண்டு ஆட்கள் தேவைப்பட்டனர்.

• • •

ஊதாவும் ஆரஞ்சுமாய் மாலை வானம் குழம்பிக் கிடந்தது. பகல் வானத்தை இவ்வளவு ஆழமாய் ஊடுருவிப் பார்க்க முடியாது. இரவு வானத்தில் நட்சத்திரங்கள் சிதறி ஊடுருவலைத் தடுத்து எல்லை கொடுத்து விடுகிறது. இந்த அந்தி வானம் மகா மயக்கம். கனவு மாதிரி மயக்கம். இருளும் ஒளியும் அற்ற நேரம். பகலும் இரவும் இல்லாத வேளை. காயத்ரிக்கு இந்த நேரம் மிகவும் பிடிக்கும்.

உலகின் இதமான நேரம் இது. ஒரு பகலின் களைப்பு முழுவதையும் இந்த மயக்கம் மிகுந்த வானம் தீர்த்து வைத்து விடும்.

காயத்ரி வீட்டு வாசலில் உட்கார்ந்து, மேற்கே பார்த்துக் கொண்டிருந்தாள். அரட்டையோ கலகலப்போ சிரிப்போ வேண்டாத

# இரும்பு குதிரைகள்

### பாலகுமாரன்

''அதுவரைக்கும் நீ வேலை செய்ய வேணும்.''

''ஏம்மா, எனக்குக் கல்யாணமே வேண்டாம்னு பெரியபேச்சாப் பேசப் போறையா?''

''நான் அப்படிச் சொல்லலையே. கல்யாணத்துக்கு முன்னடி வேலை செய்யணும். மெட்ராஸ்ல போய் எனக்கும் ஒரு வேலை பாரு. எனக்கு இப்போ கல்யாண ஆசையில்லேப்பா. நல்ல வேலை. கை நெறைய சம்பளம். வாய்க்குப் புடிச்ச சாப்பாடு. உடுத்திக்கப் பளிச்சுன்னு பத்துப் புடவை.. இதுக்கு ஆசை இருக்குப்பா.''

ஒரு வாரம் கழித்து நாணு சார் சின்ன துணிப் பையும் மேல் துண்டுமாய்ப் பகல் நேர பஸ் பிடித்து நாள் முழுக்கப் பிரயாணம் செய்து மெல்ல இருள் கவிழும் அந்தி நேரத்தில் 'வடிவேலுவின் கம்பெனியைத் தேடி அலைந்தார்.

கே. ஆர். வடிவேல், தண்ணித் தொட்டித் தெருவில் இருபதுக்கு இருபது அடியில் ராவுத்தர் வீட்டுக்கு எதிரே உள்ள சின்ன அறையில் தன்னுடைய அன்றைய வேலைகளை முடித்து விட்டுத் தன் முதல் பெக் விஸ்கியை உறிஞ்சிக்

நேரம் ஒன்று உண்டென்றால் அது மாலை நேரம்தான். சந்தியா காலம்தான். உள்ளே வெகு தூரம் வரை அமிழ்ந்து தன்னைத் தானே கேள்வி கேட்டுத் தெளிவு கொள்ளும் நேரம் இதுதான்.

''ஏதாவது ஸ்வாமி ஸ்லோகம் சொல்லப் படாதா?'' எத்தனையோ முறை அம்மா அலுத்துக்கொண்டிருக்கிறாள்.

இந்த சுகம் எந்த ஸ்லோகத்திலும் வந்ததில்லை. தானும் சப்தமின்றி, பிற சப்தமும் தவிர்த்து ஒரு மௌன நிலை இதமாக இருக்கிறது.

''என்னடி ஏதாவது கனா காண்றயா?'' அக்கா நெருக்கமாய், கிசுகிசுப்பாய்க் கேட்டிருக்கிறாள்.

இல்லையே என்கிறபோது நம்ப மறுக்கிறாள். கனவென்று எதுவுமில்லை. ஆனால் சில திட்டமிடல் செய்ய வேண்டியிருக்கிறது. சில பாதுகாப்புகள் அவசியமாய் இருக்கின்றன.

திட்டமிடலும் பாதுகாப்புப் பற்றிய பயமும் இல்லாததால்தான் அப்பாவுக்கு இந்த அவஸ்தை நேர்ந்திருக்கிறது. அறுபது வயசுக்கு இந்த அலைச்சல் விதித்திருக்கிறது.



வேதனைதான். பஸ் நம்பரைப் பார்க்கத் தவித்துப் போகும் அப்பாவை நினைக்கிற போது வேதனையாய் இருக்கிறது. அந்த மெட்ராஸ் நெரிசலில் எங்கு தங்கி எங்கு நடந்து எப்படி வாழப் போகிறார் என்று துக்கம் வருகிறது.

ஆணைகப் பிறக்காது போன ஏக்கம் வருகிறது.

வீட்டில் முப்பத்தியொரு ரூபாய் நாற்பது பைசா–சில்லறைதான் இருக்கிறது. இந்த மாசம் மிச்ச நாள் இதில்தான் ஓட வேண்டும். டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட்டில் காமர்ஸ் பாடம் சொல்லிக் கொடுப்பதில் நூறு ரூபாய் வரும். அப்பா ஏதாவது அனுப்பினால்தான் சரிப்படும். அனுப்ப முடியுமோ. அவருக்கே போதாமல் அவஸ்தைப்பட வேண்டி வருமோ தெரியவில்லை. ஒரு மாதம் கடன் வாங்கலாம். கெஞ்சிக் கூத்தாடிக் கடன் கேட்கலாம். எத்தனை மாதம் கேட்க முடியும்?

கடன் கேட்க நான்தான் போக வேண்டும். காமர்ஸ் பாடம் சொல்லித் தருவதே மன்னார் குடியில் இளக்காரமாய் இருக்கிறது. கடன் கேட்க வேறு தாவணி போர்த்திக் கொண்டு போனால் இல்லாத பொல்லாத கேள்வி கேட்பார்கள். அப்பாவை ஆயிரம் குறை சொல்லித் தீர்ப்பார்கள். அப்பாவைக் குறை சொல்வதைத் தாங்கவே முடியாது.

அப்பாவுக்குக் காசு சேர்க்கிற சமர்த்தில்லையே தவிர குடும்பத்தை உயர்த்துகிற உரம் குறைவே தவிர அவர் தமிழும் ஆங்கிலமும் அபாரம். அவர் சம்ஸ்கிருதப் புலமை கேட்பவரைப் பரவசப்படுத்தும்.

முந்தாநாள் கூட தஞ்சாவூரிலிருந்து மூன்று இளைஞர்கள் வந்து போனார்கள். வாழைப் பழமும், கவுளி வெற்றிலையும் ஹார்லிக்ஸ் பாட்டிலும் பேனா செட்டும் கொண்டு வந்து பரப்பினார்கள். அப்பாவைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறார்களாம்.

ஹோட்டலில் டிபன் முடித்துவிட்டு ராமுழுக்கப் பேசினார்கள்.

பாம்பும் கயிறும் பற்றிக் கேள்வி கேட்டார்கள். அத்வைதம் பற்றிப் பேசினார்கள். காளிதாசனைப் பற்றித் தெரிந்து கொண்டார்கள்.

வீட்டுக்கு அருகே ஒரு குளம். அதில் தாமரை மலர்கள். குளத்தருகே ஒரு மரம். சுத்தமான மேடை. இதமான சுகமான காற்று. வீட்டில் மனைவி உணவு சமைக்கும் நறுமணம். குழந்தைகளின் மெல்லிய கூக்குரல். இப்படிப்பட்ட சூழ்நிலை வேண்டுமாம் கவிஞனுக்கு. அவனால்தான் நல்ல கவிதைகள் எழுத முடியுமாம். இது காளிதாஸன் சொன்னதாம்.

அப்பா இதை விவரணையாய் சமஸ்கிருதத்திய தமிழில் சொன்னபோது அவளையும் அறியாமல் ''ஐயோ'' என்று கூக்குரலிட்டாள். இளைஞர்கள் திரும்பிப் பார்க்க உள்ளே நகர்ந்து கொண்டாள்.

அடிப்படை வசதி உள்ளவன்தான் ரசனையோடு இருக்க முடியும். குழப்பமின்றி யோசிக்க முடியும்.

எதிரே அந்தி வானம் தெரிகிறது. ஊதா மறைந்து வெறும் ஆரஞ்சு போர்த்திக் கொண்டிருக்கிறது. இது சாயா என்கிற தேவதை உலவும் நேரம். தகடு தகடாய் ஆரஞ்சு மேகம். ஆனால் வீட்டில் முப்பத்தியொரு ரூபாய் நாற்பது பைசா நினைவு போக மாட்டேன் என்கிறது. பணம் மிகவும் அவஸ்யம். மிக மிக அவஸ்யம்.

குறைந்த பட்சம் அக்கா கல்யாணமாவது சீக்கிரம் நடந்தாக வேண்டும். ஆனால் உள்ளே முப்பத்தியொரு ரூபாய் நாற்பது பைசாதான் இருக்கிறது.

காயத்ரி கண்களை மூடிக் கொண்டாள். உள்ளே ஆரஞ்சு மிதந்தது.

அக்கா கனவு காண்கிறாயா என்று கேட்கிறாள். எதைக் கனவு என்று அவள் அர்த்தப் படுத்துகிறாள் என்பது தெரிகிறது. வாலிபனை அரும்பு மீசைக்காரனை, பரபரப்பும் துடிதுடிப்பும் உள்ளவனை நினைத்துக் கொண்டிருக்கிறதுதான் கனவு என்று நினைக்கிறாள் போலிருக்கிறது.

தனக்கென்னவோ இவர்களை விடலைகள், பையன்கள் என்றுதான் நினைக்க முடிகிறதே தவிர இவர்களோடு பேசமுடியும், சிரிக்க முடியும் என்றே தோன்றவில்லை. பேசவே முடியாத ஆளைக் கனவில் கூட்டிப் போய் என்ன செய்வது? தெருவில் நடக்கையில் பரக்கப் பரக்கப் பார்க்கும் பையனை எப்படி நேசிப்பது? தன்னால் யாரை நேசிக்க முடியும்? அப்பா மாதிரி இருக்கிறவனை அப்பாவின் அறிவோடு மிளிர்கிறவனை நேசிக்கலாம். நேசிப்பு என்பது வயசைப் பொறுத்ததா? வயசையா நேசிக்க முடியும்? வயதின் பின்புலமான அனுபவத்தைத்தானே. ஹா என்று பெண்ணை வெறிக்கிறவனை அசிங்கப் படுத்தத்தான் தோன்றுகிறது.

அந்தத் தஞ்சாவூர் இளைஞர்கள் மூன்று பேரும் திருமணமானவர்கள், வீட்டில் மூன்று பெண்கள் இருப்பதை லட்சியம் செய்யாமல் அப்பாவோடு உட்கார்ந்திருந்தார்கள். இவள் காளிதாஸன் பாட்டுக்கு ஐய்யோ என்றதும் திரும்பிப் பார்த்துவிட்டு மறுபடி பேச்சில் இறங்கி விட்டார்கள். அவர்களைப் பிடித்திருந்தது. ஒரு நாள் பாடம் கேட்டதற்கு நூறு ரூபாய் கவரில் போட்டுக் கொடுத்ததும் ஆச்சரியமாக இருந்தது. அப்பா காசு வேண்டாம்என்றுசொல்லி விட்டார்.

''பழம் வெத்திலை மரியாதை. ஹார்லிக்ஸ் பாட்டில் கிழவன்னு சொல்லிக் கொடுக்கிற அன்பு. பேனா செட் உபயோகப்படும். ஞாபகார்த்தம். காசு எதுக்குப்பா? வேண்டாம். நீ மறுபடி வந்தாக்கா சரி நூறு ரூபா வருமானம்னு ரூபாலேயே புத்தி நிக்கும். பேச்சு சுவாரஸ்யப்படாது. காசுக்குக் கத்துவேன். வாத்தியார் மாதிரி. நெஞ்சிலேர்ந்து விஷயம் வராது. காசு வேண்டாம். முடிஞ்ச போது வாங்கோ பேசலாம். நிறைய இலக்கியம் பேசலாம்.'' அப்பா திடமாய் மறுத்து அனுப்பினார். சட்டென்று அவர் மனசைப் புரிந்து கொண்டு நகர்ந்தார்கள்.

அப்பாவை, அந்த இளைஞர்களை ரொம்பப் பிடித்துப் போயிற்று. அலட்சியம் செய்கிறவர்களைத்தான் லட்சியம் பண்ண முடிகிறது. சிரித்து ஒழுகி அசடு வழியாதவர்களைத்

''நேற்று 'பாயும் புலி' பார்த்தாயாமே?''

''தியேட்டர் ரொம்பப் பழசு. 'பாயும் எலியும்' பார்த்தேன்!''

—ஆர். கண்ணன்



தான் ஸ்நேகம் கொள்ள முடிகிறது. இதை அக்காவோடு பேசினபோது பைத்தியம்மாதிரி பாட்டுப் பாடினுன்.

''மாறும் கன்னி மனம் மாறும்
கண்ணன் முகம் தேடும்'' — ·சினிமா தோழி மாதிரி தோளில் கை போட்டுக் கொண்டாள். உதடு சுழித்தாள். காயத்ரிக்கு அடி எழுவே என்றுதான் கூக்குரல் வந்தது. சகலத்துக்கும் சினிமாவா? ஆனந்தம், அழுகை ஆத்திரம் அத்தனையும் சினிமா: பாட்டு மட்டும்தானு வெளியிடும்? அக்கா இந்த மாதிரி நிறையச் செய்கிறுள்.

''என்னுயிர்த் தோழி கேளொரு சேதி
இதுதானே உங்கள் மன்னவன் நீதி''

கண்ணடிக்குள் வெட்கப்பட்டு நெளிந்து முகத்தைக் கையால் பொத்திக் கொண்டு பிறகு மெல்ல மெல்ல விரித்து உதட்டைக் கடித்து கண்களைப் படபடவென்றுகொட்டிக்கொண்டு துவளுகிறவளைப் பார்க்க ஹா என்று வேதனை பொங்கும். வீட்டில் மரப்பாச்சி பொம்மை கூட இல்லை. மன்னவனுக்கு எங்கே போக.

ஆனல் எந்தப் பாட்டும் தன்னை உசுப்பாது போய் விட்டது. பாட்டை விடமொழி, சொல் உயர்த்தி என்று பட்டுவிட்டது. சினிமாப் பாட்டோ சங்கீதமோ நாட்டுப் பாடலோ அசைக்கவே இல்லை.

''உனக்கு சங்கீதம் தெரியுமாப்பா?''

''தெரியும்.''

''அது ரொம்ப உசத்தியா?''

''நிச்சயம் உசத்திதான். என்ன கேள்விம்மா இது?''

''எல்லாரும் சொல்றதைச் சொல்றயா, இல்லே நீயே தெரிஞ்சுதான் சொல்றயா?''

''மனசுக்கு இதமா இருக்கிறது தெரியறதே!''

''இதம்மான்னு?''

''சகல கவலைகளையும் மறந்து, அதுலயே லயிச்சுப் போய்ப் பாட்டு முடிஞ்சப்புறம் லயிப்பு நெஞ்சிலேயே தொடர்ந்து....''

''ஹாங்ஓவர்ன்னு இங்கிலீஷ்லே சொல்வாளே அது மாதிரி.''

''ச்சேச்சே ஹாங் ஓவர் குடி—சமாச்சாரம்னு.''

''சங்கீதம் கூட போதை தாம்பா. மது சாப்டற மாதிரிதானே.''

''உன் பிரச்னை என்ன காயத்ரி?''

''சங்கீதம் பெரிய விஷயமில்லேன்னு...''

''ச்சசு... உனக்குத் தெரியுமா சங்கீதம்?''

''ம்ம்ம் தெரியாது.''

''அப்புறம் அபிப்பிராயம் எப்படி வரும்? யாரோ சொன்னதை வச்சுண்டா?''

''இல்லப்பா. பாட்டு தொந்தரவாய்ப் படறது. நாலு நிமிஷத்துக்கு மேலே கேட்க முடியலே.''

''எது இதம் உன்வரையில்?''

''கவிதை. பொயட்ரி. அடுக்கடுக்கான சொல். சொல்லிலிருந்து வரும் செய்தி.''

''பாட்டும் மொழியோடு கலந்துதானே அம்மா வருது?''

''பாடறப்போ பாஷை பாழாறதுப்பா.''

''எக்ஸாம்பிள்?''

''சாரம் உதைத்துச் சரமழை போல்
வாழ உலகினில் பெய்திடாய்-நாங்களும்''

இதைச் சொல்லிப் பார். என்ன வேகம் எவ்வளவு திடம். உதைத்துச் சரமழைப் போல்னு சொல்றபோது மனசுல வர் படம் பளிர்னு சரமாரியா இறங்குகிற மழை. கோடு கோடா மழை. இதை எப்படிப் பாட்டுல ராகத்தில் அடக்க முடியும்? இது பாடறப்ப செத்துப் போயிடலையா?''

''தேவாரம், திருவாசகம், பாசுரம் எல்லாமே பாடல்கள்தாம்மா.''

''எனக்குச் சந்தேகமா இருக்கு. ராகம் மையமா வச்சா இதை எழுதியிருக்க முடியும்? முதலில் உணர்வு, உணர்விலிருந்து செய்தி, செய்தியை வரிசைப்படுத்தக் கவிதை. அப்புறம் நடுவுல யாரோ பாட்டா இழுத்துட்டா. செய்தி உணர்வு எல்லாம் மங்கிப் போச்சு.''

''புதுசா இருக்கும்மா உன் விவாதம்.''

''தப்பா இருக்காப்பா?''

''இவளுக்குப் பாட வராது. ஆம்பளை தொண்டை. கரகரன்னு அதுதான் யார் பாடினுலும் எரிச்சல் வருது.'' அக்கா குறுக்கே புகுந்தாள்.

''ச்சு, நீ குறுக்கே பேசாதே.''

''காயத்ரி, உனக்கு ஒரு தியாகையர்கீர்த்தனை சொல்றேன். வேண்டாம். பாஷை புரியலேம்பே, பாரதி கவிதை சொல்றேன்.''

''நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோமென்று கும்மியடி.
மாட்டையடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டுவந்தே
வீட்டினில்எம்மிடம் காட்டவந்தார்-அதை
வெட்டிவிட்டோம் என்று கும்மியடி.''

அப்பா கைதட்டிப் பாடிக்காட்டினுர். எவ்வளவு கடின பதங்கள். எவ்வளவு வேகம்



காவலன்: தனது பேச்சாற்றலால் மக்களைப் புரட்சிக்குத் தூண்டிய அந்த மனிதனைத் தங்கள் விருப்பப்படி சிரச்சேதம் செய்து விட்டோம் அரசே!

அரசன்: கடைசி விருப்பமாக அவன் ஏதாவது தெரிவித்தானு?

காவலன்: அதெப்படி முடியும்? அவன் தான் ஊமையாயிற்றே!

—அ. சிங்காரவேலு

இது கும்மிப் பாட்டும்மா. பாட்டு. பாடல். என்ன குறைஞ்சு போச்சு?''

''பாடமா இதைச் சொல்லிப் பாருப்பா. வேகம். சொற்பொழிவு வேகம். நிர்மானம் வரலையா? மனசுக்குள்ளேயே பாடம் படிச்சுப் பாரு. இந்த விஷயத்தின் கோபம் வர்ற தில்லையா. பாடினா?''

''முரட்டுத்தனமாப் பேசறே காயத்ரி.''

''நோ. நெவர். சங்கீதம் ஒரு தவறான விஷயம்பா. சொல்லும் அதன் பொருளும் பிரியாது இருப்பதைப் போல என்றும் பிரியாது உலகத்துக்குத் தாயும் தந்தையுமாய் இருக்கிற பார்வதி பரமேச்வரர்கள், என் சொல்லும் அதன் பொருளும் பிரியாதிருக்கும்படி அருளட்டும். காளிதாஸன் பத்தி எனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கே. பாடினா சொல் பொருள் பிரியலையா. பாடறது பாவமில்லையா? பொருளை விட ராகம் — முக்கியமாகலாமா?''

''காயத்ரி.''

''சரிப்பா. இது சந்தேகம்தான். நிர்மானமில்லே.''

''உனக்குப் புரியாத விஷயத்தை ஏன் போட்டுக் குடையறே. பெரியவா நல்லது சொல்லியிருக்கா. கேட்டுக்கோ.'' அம்மா முணு முணுத்தாள்.

''முடியாது. தெரியாமக் கேட்க முடியாது. கேட்டுக்கறதுக்கு அர்த்தம் தெரிஞ்சுக்கறது தான்.''

நாராயணஸ்வாமி மகளைத்தடவிக்கொடுத்தார். ''உனக்கு இந்த ஹிம்ஸை வந்துடுத்தா. இனிக் கஷ்டம்தான்.''

''ஏம்பா?''

''கேள்வி கேட்டுக்க ஆரம்பிச்சுட்டே. இனி ஒத்துப்போக முடியாது. தூக்கம் வராது. லோ லோன்னு புத்தி பறக்க ஆரம்பிக்கும். சகலமும் தப்புன்னு படும். வெரி குட். படு படு. அனுபவம் நிறையச் சொல்லித் தரும். நான் சொல்றதை விட உனக்குஉன் அனுபவம் தெளிவு கொடுக்கும்.''

இது தக் கென்று மனசில் பிடித்துக் கொண்டது. மன்னார்குடி உலகம் சிறியது. குறுகியது. சந்தேகம் இல்லாத ஜனங்களை உடையது. நிர்மானங்கள் கொண்டது. சீக்கிரம் மன்னார்குடி விட்டு நகர வேண்டும். வேறு மண், வேறு மனிதர்கள் சந்திக்க வேண்டும். போதும் போதும் என்கிறவரை தெரிந்து கொள்ள வேண்டும்.

அப்பா இப்போது மெட்ராஸில் என்ன செய்து கொண்டிருப்பார். 'கே. ஆர். வடி வேலைப் பார்த்திருப்பாரா? பேசி வேலை ஏற்றுக் கொண்டிருப்பாரா? சாப்பிட்டிருப்பாரா? தலை சாய்க்க இடம் கிடைத்திருக்குமா? காசு போதுமா? அப்பா என் செல்ல அப்பா. சீக்கிரம் என்னை வரச்சொல்லி எழுதேன். எனக்கும் ஒரு வேலை பாரேன். இரண்டுபேரும் வேலைக்குப் போய் வீட்டுக்கு வந்து சமைத்துச் சாப்பிட்டுப் பேசுவோம். நிறையப் பேசுவோம். எனக்குச் சொல்லிக்கொடு. என் கேள்விக்கெல்லாம் பதில் சொல்லு. உன் அறிவெல்லாம் எனக்கு வழங்கு. உனக்கு நான் பணத்தின் மதிப்பைச் சொல்லித் தருகிறேன்.

காயத்ரி கண்களை மூடிக் கொண்டாள்.

''என்னடி ஏதாவது கனவா? யார் இப்ப கனவுல?-ரஜினியா, கமலா?'' அக்கா அருகே உட்கார்ந்து கொண்டாள்.

''ம்ம் காளிதாசன்.''

''யாரு.... காளிதாஸனா?''

''ஆமாம். அவனும் ஆம்பளைதான்.''

''பார்த்திருக்கயா, முடியாதே!''

''கேள்விப்பட்டிருக்கேன்.அது போறாதா?''

மறுபடி கண்களை மூடினாள். ஒரு குளக் கரைப் படியில் உட்கார்ந்து உத்தரீயமும், குண்டலமுமாய் யாரோ எழுதிக் கொண்டிருக்கிறார்கள். மெல்ல வீசும் காற்று. இதமான வெயில்.



ராமதாஸ் என்பவர் மதுரையில் அசோக் பவன் என்ற ஓட்டல் வைத்து உள்ளார். இவர் தினமும் இரண்டு யானைகளுக்குச் சுமார் 100 ரூபாயி லிருந்து 120 ரூபாய் வரை டிபன் வழங்குகிறார்! சில நாள் ஐந்து படி பாலில் போர்ன்விடா கலந்து கொடுக்கிறார். காலையில் தமயந்தி, துர்க்கா என்ற இரண்டு யானைக்கும் டிபன் கொடுத்த பிறகுதான் மற்றவர்களுக்கு டிபன் வழங்குகிறார்.

—ஜெயா

''வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ
வாசகர்த்தப்ரதி பத்தயே''

நிதானமாய் நிறுத்திச் சொல்கிறார்கள்.

''சினிமாக்காரன்னு ச்சீங்கற. உனக்குள்ளவும் ஒரு பொயட் இருக்கான். காளிதாஸன் இல்ல... அது மாதிரி யாரோ. இன்னிக்குக் காளிதாஸன் இருந்தா சினிமாவுக்குப் பாட்டு எழுத மாட்டானா?''

''மாட்டான்.''

''சினிமா ஆசையே இருக்காதா?''

''இருக்காது.''

விஸ்வநாதன் தன் டைரியில் ஆறாவது பாடம் என்று தலைப்பிட்டு அடுத்த கவிதையை எழுதத் துவங்கினான்.

(தொடரும்)



# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள்
ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

நான்கு ஆண்டுகளில் 'சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்'
தங்கள் முதலீடு இரட்டிப்பாகிறது ரூ. 5000/ம் அதற்கு
மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு ஒரு அழகிய
'வெள்ளி குத்து விளக்கு' அன்பளிப்பாக வழங்கப்படும்



# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் பி. லிட்.

எமது புதிய குருப்புகள்

| மாதங்கள் | அங்கத்தினர்கள் | சந்தா தொகை | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 25 | 25 | 2000 | 50,000 |
| 25 | 25 | 1000 | 25,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 100 | 2,000 |

ஏல முறை: காப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.
'காப்புத் தொகை' ஏலத்தன்றே திருப்பித்தரப்படும்.

முதலீடு செய்ய, சீட்டுகள் சேர, தொடர்பு கொள்க :

நிர்வாக அலுவலகம் : 39, நடேச ஐயர் தெரு, 2வது மாடி
(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன் : 447186

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971
தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி.எ. கனால் ரோடு, தஞ்சாவூர், போன் : 1626
திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601-போன் : 483
பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை, போன் : 453

**C.A. BALOO** Managing Director

**ஜெயசக்தி — நம்பிக்கைக்கு பெயர் பெற்றது**

CHARI

# ‘வீடியோ’வரை காத்திரு! 9

கதை: ஜே.எஸ்.ராகவன் சித்திரம்: செல்லம்















சக்தி என்று விளிக்கப்பட்ட முரடன் சுரேஷை ஆந்திரப் புயல் போல் நெருங்குகிறான்.




முரடன் 2 சோம்பு பற்களைக் காட்டிக் கொண்டு பாய்கிறான்.




பையிலிருந்து ஒரு பிஸ்டலை எடுக்கிறான் யோகேஷ்.




பக்கத்து அறையில் டெலிபோன் அடிக்கிறது.




துப்பாக்கி முனையில் அவர்களை அடுத்த அறைக்குத் தள்ளிச் செல்கிறார்கள். டெலிபோனில் சுப்பையா பேசியதும் ஜோஜியிடம் கொடுக்கிறான்.













தொடரும்

# அஸ்ஸாம் தேர்தல் முடிவுகள் குறித்து?

## நீங்கள் கேட்டவை

## தராசு

O ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்

? திருப்பதி ஆலய நிதியை அரசு கஜானாவுக்கு மாற்றுமாறு என். டி. ஆர். உத்தரவு பற்றி?

! ''பாங்கு வட்டிக்கு அரசுக்குக் கடன் கொடுங்கள்; இத்தனை வருஷத்தில் திருப்பித் தந்து விடுகிறேன்'' என்று கோரியிருந்தால் பிரச்னை இல்லை. தேவஸ்தானமும் இயன்ற அளவில் ஒத்துழைத்திருக்கும். அரசு ஆணை என்று ஆரம்பிக்கப் போகச் சிக்கல்கள் தோன்றியுள்ளன. (1) தேவஸ்தானத்தில் உள்ள உபரித் தொகை என்று எப்படி யார் நிர்ணயிப்பது? (2) பெறப்படும் தொகை சரியாக முதலீடாகுமா? வீண் விரயமாகுமா? (3) இதே நியாயம் பிற மதக் கோயில்கள் விஷயத்திலும் கடைப்பிடிக்கப்படுமா?.... இத்யாதி.

O கே. வி. சம்பத், ஈரோடு

? தமிழக மின் உற்பத்திக்கு ஆஸ்திரேலியாவிலிருந்து நிலக்கரி கொண்டு வருவதாகச் சொன்னது நாடகம்தானே?

! நாடகமாக இருப்பதே தேவலாம். நடந்து விடக் கூடாது. நம் தேசத்திலேயே ஏராளமான நிலக்கரி கிடைக்கும்போது அயல் நாட்டிலிருந்து தருவிப்பது சீர்கெட்ட நமது பொருளாதாரத்தை மேலும் பாழாக்கும்.

O த. சத்தியநாராயணன், அயன்புரம்

? அஸ்ஸாம் தேர்தல் முடிவுகள் குறித்து?

! தேர்தல் ஒரு மோசடி; காங்கிரஸுக்கு அபரிமித மெஜாரிட்டி என்பது மாபெரும் மோசடி; அமைச்சரவை அமைப்பதென்பது பிரும்மாண்டமான மோசடி.

O மு. ஜைனுதீன், மதுரை-1

? பூலன் தேவி கேட்டிருக்கும் சலுகைகள் குறித்து?

! அத்தனை சலுகைகள் தந்தது தப்பு; அதன் பிறகு அதனைச்சரணாகதிஎன்றுவர்ணித்தது தப்பு; ஏகப்பட்ட சலுகைகளைப்பெற்றுள்ள அவளுடைய சரணாகதி நிபந்தனை யற்றது என்று கூறுவது ரொம்ப ரொம்பத் தப்பு.

O மேஜர்தாசன், ஈரோடு-10

? பூலன் தேவி வேஷத்துக்குப் பொருத்தமானவர் யார்?

! சிலுக்கு ஏற்கனவே புக் ஆகி விட்டதாகக் கேள்வி. என் வாயைக் கிளறுகிறீர்கள். நான் யாராவது அரசியல்வாதி பெயரைச் சொல்லி வைக்கப் போகிறேன்!

O வி. ஏ. ராமகிருஷ்ணன், கோவை

? அதிரசம் சம்பவம், விஷம் எனில் பாலகுமாரன் எழுத்து அமுதமா?

! ரசமும் விரசமும் எழுதப்படும் விதத்தில் இருக்கிறது. பாலுணர்வைக் கையாண்ட டி. எச். லாரன்ஸும் இர்விங் வாலஸும் ஒன்றுவிட மாட்டார்கள். ஆனால் இர்விங் வாலஸையே அவருடைய வேறு பல திறமைகளுக்காக நான் மதிக்கிறேன்.

O ஆர். நாகராஜன், பரசலூர்

? வலம்புரி ஜான் எம். எல். ஸி. ஆகிவிட்டாரே?

! விசுவாசம் தந்த பரிசு. வாழ்த்துவோம். ஆனால் ஒன்று. முதல்வர் கூற்றுக்கள் அனைத்தையும் நியாயப்படுத்த வேண்டிய நிர்ப்பந்த நிலை மாறி, முதல்வர் கூறுவதில், செய்வதில் தவறு இருப்பின் அதைக் கட்சிக்குள்ளேயே எடுத்துக் காட்டித் திருத்தக் கூடிய நிலை வரும்போதுதான் வலம்புரி ஜான் போன்றவர்களின் ஆற்றலுக்கு மெய்யான மதிப்பு உருவாகும்.

O ஏ. எம். முகம்மது நிஜாமுதீன், நீடூர்

? சகிக்க முடியாதது எது?

! கருணாநிதியின் பாத யாத்திரை சினிமாவைத் திரையிடத் தடை விதிக்கப்பட்டிருப்பது.

O எம். இராஜேந்திரன், லால்குடி

? அழகு கெட்டுவிடும் என்ற காரணத்துக்காகக் குழந்தைக்குப் பால் கொடுக்காமலிருக்கும் தாய்மார்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! நான் நினைக்க என்ன இருக்கிறது? தாய்ப் பால் அருந்துவதில் கிடைக்கும் உடல், மன ஆரோக்கியமும் திருப்தியும் குழந்தைக்கு வேறு எதிலும் கிடைக்காது என்பதையும், தாய்ப் பால் தராமல் இருந்தால் மார்பில் புற்றுநோய் வர சாத்தியக் கூறுகள் அதிகம் என்பதையும் தாய்மார்கள் அல்லவோ எண்ணிப் பார்க்க வேண்டும்!

O வெ. வைத்தியநாதன், களஞ்சேரி

? கணித மேதை சகுந்தலா தேவியே சரஸ்வதி ரகசிய அது இது என்று ஆரம்பித்துவிட்டாரே?

! அந்த அளவுக்கு நமது நாட்டில் கணித மேதைகளுக்கு மதிப்பு இல்லாததையும், சோதிடம், ஆருடம், தாயத்துப் போன்றவற்றுக்கு மவுசு இருப்பதையும் உணர்ந்து வருந்துகிறோம்.

○ எஸ். எஸ். வாசன், தென் எலப்பாக்கம் ★
? இன்றைய பத்திரிகை உலகில் எது அதிகம்? எது குறைவு?

! பக்கிங்ஹாம் அரண்மனையில் பணியாற்றிய சமையல்காரர் ஓய்வு பெற்றதும் அரச குடும்பத்தினரின் அந்தரங்கப் பழக்க வழக்கங்களை ஒரு பத்திரிகைக்கு வெளியிட்டுப் பணம் பண்ண முற்பட்டார். அரசி, நீதி மன்றம் மூலம் இதற்குத் தடை உத்தரவு பிறப்பிக்க வேண்டி நேர்ந்தது. படிப் படியாக நமது நாட்டிலும் இது போன்ற நிலை உருவாகி வருகிறது. பரபரப்பூட்டுதல் அதிகம்: பொறுப்புடன் நடப்பது குறைவு. குற்றம் குறைகளை அடுக்குவது அதிகம்: தீர்வு காண யோசனை கூறுவது குறைவு.

○ பூபால்சிங், சென்னை-35
? THE BODY எப்படி?

! நம்முடைய மனோ பலம் எப்படி என்பதைப் பொருத்து அது நன்மையும் செய்யும், தீமையும் விளைவிக்கும்.

○ ஏந்தல் ஆர். இளங்கோ, திருச்சி


✖ என். டி. ஆர்.


✖ வலம்புரி ஜான்


✖ ஜைல் சிங்


✖ அஞ்சையா

? ஆந்திராவில் ஜனாதிபதி ஆட்சி வரும் என்கிறாரே அஞ்சையா?

! ஸர்தார்ஜி ஜோக் போல அஞ்சையா ஜோக்ஸ் ஜகப் பிரசித்தி. அவற்றுள் ஒன்று இது. மற்றொன்று அவரது உண்ணா விரதம்.

○ ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்
? இந்திய ரயில்வேக்களில் மின்சார பல்புகளைப் பாதுகாக்கக் கம்பி வலையும் பொது இடங்களில் தண்ணீர் தகரக் குவளையைப் பாதுகாக்கச் சங்கிலியும் இருப்பதைப் பார்க்கும்போது அயல் நாட்டவர் என்ன எண்ணுவார்கள்?

! இதெல்லாம் கூடத் திருட்டுப் போகும் அளவுக்கு இங்கே தரித்திரம் தாண்டவமாடுவதைத்தான். மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தால் இதற்கெல்லாம் அவசியம் இல்லையே!

○ இரா. கலைவண்ணன், பூதலூர்
? 20-2-83ல் மாவட்டச் செய்தி மலர் நிகழ்ச்சியில் மாநில அரசுக்கு யோசனை கூறுவது போல் செய்தி ஒலிபரப்பானது மத்திய அரசுக்கு யோசனை கூறுவது போல் செய்தி ஒலிபரப்பாகுமா?

! ஆகும் — டி. வி. வானொலி சுதந்திரமான கார்ப்பரேஷனானால். அரசு இலாக்காவாக இவை இருப்பது ஜனநாயக விரோதம்.

○ பி. கே. சங்கர், கல்கத்தா
? ஜனாதிபதி ஜைல் சிங் திருமதி இந்திரா காந்தி கடவுள் தந்த பரிசு என்று வர்ணித்திருக்கிறாரே?

! உண்மைதான். ஜைல் சிங்குக்குக் கடவுள் தந்த பரிசுதான் இந்திரா காந்தி.

○ வி. கே. துரைசாமி, திருச்சி
? டில்லியில் நடந்த ஆசிய விளையாட்டுக்கு 1000 கோடி செலவழித்த இந்திரா அரசு தற்போது மாநில அரசுகளுக்குச் சிக்கனம் போதிக்கிறதே?

! இப்போது கூட்டுச் சேரா நாடுகளின் மாநாட்டுக்கு இன்னும் ஒரு 500 கோடி செலவழிக்கப் போகிறோம். கண்டுகொள்ளாதீர்கள் என்று அதற்கு அர்த்தம்.

○ கே. ராஜகோபாலன் மதுரை-6
? அழகர் கோயில் அருகே ஒரு பசுமாடு வாய் திறந்து பேசி 1986 வரை பஞ்சம் என்று அறிவித்து இறந்ததாம்?

! அப்படியா! சில நாட்களுக்கு முன்பு ரேடியோவில் பேசிய கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும்!

○ பெ. மோகன், மே. மாம்பலம்
? மூதறிஞர் ராஜாஜி பேரறிஞர் அண்ணா இருவரில் திறமையாகப் பேசுகிறவர் யார்?

! ஒன்று நயாகரா நீர்வீழ்ச்சி, மற்றொன்று குற்றாலம் அருவி. இரண்டுமே இரு வேறு விதமாக ரசிக்கப்பட வேண்டியவை.

○ லலிதா சீனிவாசன், கோவை
? குறிப்பிட்டுச் சொல்ல முடியாததை × என்கிறோம். உடலுக்குள் இருக்கும் நோயைத் துல்லியமாகக் காட்டும் கருவியை × ரே என்பதா?

! உங்கள் கேள்வியிலேயே பதில் இருக்கிறது. அந்தக் கதிர் கண்டு பிடிக்கப்பட்டபோது அது என்ன என்று குறிப்பிட்டுக் கூற முடியாததால் எக்ஸ்-ரே என்று அழைக்கப்பட்டது. அதுவே நிலைத்துவிட்டது.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
திரு எஸ். எஸ். வாசன்,
தென் எலப்பாக்கம்-604.408
வந்தவாசி வழி
வ. ஆ. மாவட்டம்.













# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்



தயாரிப்பாளர்
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
போர்ட், பம்பாய்-400 023. போன்: 273831

everest/83/BCL/65-tm

தமிழ் நாட்டிற்கான விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ், 7, காசி செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32450 & 32886



# உறங்காத நினைவுகள்

வித்தியாசமான மேக்கப். கால் ஊனம். முகத்தில் அகலமான கண்ணாடி. சக்கர நாற்காலியில் வலம் வரும் சிவகுமார். பணக்காரி ராதிகாவின் நடவடிக்கைகளை நண்பர்களிடம் முன்கூட்டியே பிட்டுப் பிட்டு வைக்கும்போது! 'O God மறுபடியுமா?' என நினைக்க வைக்கிறார்.

ப்ளாஷ் பேக் வந்த பிறகு உண்மை புரிகிறது. ராதிகா சுமந்து நிற்கும் பதவிக்கும் பணத்திற்கும் உரியவர் சிவகுமார்தான் என்று! இவர் ராதிகாவின் பூர்வீகம் தெரிந்தவராக இருப்பதை ஒப்புக் கொள்ளலாம். அதற்காக 'இரவு மூன்று மணிக்கு போன் செய்து பாருங்கள். அவர் தூங்காமல் அழுது கொண்டிருப்பார். உடனே ரிசீவரைக் கையில் எடுப்பார்' என்று சோதிடம் சொல்வதை எப்படி ஒப்புக்கொள்ள இயலும்?

சிவகுமாரும் சரி, ராதிகாவும் சரி, நடிப்பில் குறை வைக்கவில்லை.

தன்னைப் பார்க்கவந்த தங்கையின் காதலனுக்குக் கூல் டிரிங் கொடுக்கச் சொல்லும் ராதிகா, அவனது எண்ணத்தில் களங்கம் இருப்பதைத் தெரிந்து கொண்டதும், கூல் டிரிங் கொண்டு வந்த பையனைத் திட்டி இன்சல்ட் செய்வதில்தான் எத்தனை கண்ணியம்! ரொம்ப முன்னேற்றம்!

மேனகா எந்தப் படத்தில் வந்தாலும் மரணத்தையும் கூடவே அழைத்து வந்து விடுகிறார். இதில் தற்கொலை, கொடுத்த பாத்திரம் சிறியதே என்றாலும் நிறைவாக நடித்து நல்ல பெயர் எடுத்துக் கொண்டு விடுகிறார்.

ராஜீவ், ஒய். ஜி. மகேந்திரன், சூரியகாந்த், சந்திரஹாசன் நடிப்பில் கூட்டணி வகுத்துள்ளார்கள். இளைஞர் கூட்டணி!

சிலுக்கு ஸ்மிதாவின் தோற்றத்தைப் போல் பானு மகேந்திராவின் காமிராவும் படத்தை எடுப்பாக்கிக் காட்டியிருக்கிறது.

உயர்ந்த ரசனை உள்ளவர்களின் உறங்காத நினைவுகளை உசுப்பி விடும் நல்லதொரு படத்தை ஆர். பாஸ்கரன் இயக்கியுள்ளார்.

-திரைஞானி



# இது எங்க நாடு

லஞ்ச ஊழலுக்கும் அரசியல் பித்தலாட்டங்களுக்கும் மொழி வேறுபாடு இல்லை. மேடையிலோ திரையிலோ அதை அம்பலப் படுத்துவதும் தமிழுக்குப் புதிதல்ல.

புதிது: சாராயக் கலக்கல்காரர்கள்தான் அரசாங்கத்தை ஆட்டிப் படைக்கிறார்கள் என்று சொல்லியிருப்பதுதான்.

'ஈநாடு' மலையாளப் படத்தில் அழுத்தமாகச் சொல்லப்பட்ட அக்கருத்தை இப் படத்தின் மூலம் திரும்பச் சொல்லியிருக்கிறார்கள்.

குற்றச்சாட்டுக்கள் அனைவருக்கும்தெரிந்த, பழகிப்போனதாக இருப்பதாலோ என்னவோ அமைதியாக, கைதட்டி ஆரவாரம் செய்யாமல் மக்கள் படத்தைப் பார்க்கிறார்கள். (பாரகன் தியேட்டரில் மக்களுடன் சேர்ந்தே படம் பார்த்ததில் கவனித்தது)

ஆரம்பக் காட்சியில் அரசியல்வாதிகளின் மேடைப் பேச்சைச் செப்பிடு வித்தைக் காரனின் பேச்சுக்கும், பொதுமக்களின் தலையசைவை ஆட்டு மந்தைக் கூட்டத்திற்கும் ஒப்பிட்டுக் காட்டிவிட்டு, இடையிடையே 'இது எங்க நாடு' என டைட்டில் போட்டுக் காட்டியிருப்பது அழகான முன்னுரை.

மலையாளத்தில் பாலன் கே. நாயர் பொங்கி எழுந்தவேடத்தில் நாடக நடிகரான வியோ பிரபுவை நடிக்க வைத்திருக்கிறார்கள். நாயரை விட இவரது கதாபாத்திரம் மென்மைப் படுத்தப்பட்டுள்ளது. என்றாலும் நடிப்பில் வசன உச்சரிப்பில் நாயருக்கு நான் எந்த விதத்திலும் சளைத்தவனல்ல என்பதை நிரூபித்துள்ளார் இவர்.

நடிப்பில் முதலிடம் ஏ. எஸ். பி.யாக நடிக்கும் ராதா ரவிக்குத்தான்! 'மனச் சாட்சியைக் கழற்றிப் பாக்கெட்டில் போட்டுக்கொள்' என அறிவுரை வழங்கிய சீனியர் அதிகாரி முன்பு அதைக் குத்திக் காட்டிப் பேசும் இடம் ஏ ஒன்!

அழகுக்குச் சத்யகலா. மாவாட்டிக் கொண்டே மாலை வீசச் சொல்லிச் சிறுவனுக்கு 'ஜாக்கெட்' லஞ்சம்' கொடுக்கும் போதும் சரி, அந்த மாலை மீனாட்சி பாட்டியின் கழுத்தில் தவறி விழுந்து, ஏமாற்றம் அடையும்போதும் சரி... முகத்திலேயே நடிக்கிறார். (மீனாட்சிப் பாட்டிக்கு நாளுக்கு நாள் இளமை திரும்புகிறதோ?)

மலையாளப் படத்தைப் பார்த்தவர்கள் அதில் இடம்பெறாத ஒரு காட்சிக்காக டைரக்டர் இராம நாராயணனைப் பாராட்ட வேண்டுமானால் சாராய நெடி வீசும் இடத்தில் காந்தி சிலை திறந்து வைத்த காட்சிக்கு வரலாம். சிலையாக நின்ற காந்தி திடீரென உயிர் பெற்று அசைந்து, தம்மைச் சுட்டிக் காட்டிப் பேசியவர்களின் தலையில் தடியால் அடிப்பதைப் பாராட்டலாம். அதே சமயம், பெண்களின் கூடைப் பந்தாட்ட நிகழ்ச்சிக்கு சுரேஷை வேஷ்டி அவிழ்ப்புக் கோலத்துடன் வரவழைத்ததற்காக இராம நாராயணன் தலையிலும் ஓர் அடி அடிக்கச் சொல்லி காந்தியிடம் சிபாரிசு செய்யலாம்.

படம் முழுக்க ஒளிப் பதிவாளர் என்.கே. விஸ்வநாதனின் காமிரா துள்ளி யிருக்கிறது.

'சோ' மேடை நாடகத்தில் சொல்லிச் சிரிக்க வைத்த விவகாரங்களை, சாராயத்தில் கலந்து போதை ஏற்றிக் காட்டியிருக்கிறார்கள். அவ்வளவுதான்.

திரைஞானி

## கல்கி-பாரதி நூற்றாண்டு போட்டி-8

மகா கவி பாரதியின் கொள்ளுப் பேரன் திரு ராஜ்குமார் பாரதி குலுக்கலில் பரிசு பெறுபவர்களைத் தேர்ந்தெடுத்தார். (புகைப் படம்: கேசவன்)

**சரியான விடைகள்:**

எதிரொலி விசுவநாதன் எழுதித் தந்த வரிகள் பின்வருமாறு:

**ஆறேழு**
அங்காந்திருக்கும் வாய்தனிலே—கண்ணன்
ஆறேழு கட்டெறும்பைப் போட்டுவிடுவான்

**பத்துப் பன்னிரண்டு**
பத்துப் பன்னிரண்டு தென்னைமரம்
பக்கத்திலே வேணும் — நல்ல

**பதினெட்டு**
செப்புமொழி பதினெட்டுடையாள்—எனிற்
சிந்தனை ஒன்றுடையாள்

**இருபத்திரண்டாம்**
வாஞ்சையுண்டோ—வயதங்ஙனமேயிரு
பத்திரண்டாமளவும் வெள்ளை

**இருபத்தேழு**
இந்த மெய்யும் கரணமும் பொறியும்
இருபத்தேழு வருடங்கள் காத்தனன்

**எழுபத்தைந்தினில்**
அண்டோர் எழுபத்தைந்தினில் ஒருமுறை
மண்ணை நீ அணுகும் வழக்கினியாயினும்

**முப்பத்திரண்டு கோடி**
வீரர் முப்பத்திரண்டு கோடி விளைவித்த
பாரதமாதாவின் பதமலர்க்கே — சீரார்

**அறுபது கோடி**
அறுபது கோடி தடக்கைகளாலும்
அறங்கள் நடத்துபவள் தாய்!....

**ஆயிரத்தெழுநூற்றைம்பத்தாறு**
ஆயிரத்தெழுநூற்றைம்பத்தாறு
விக்ரமனாண்டு வீரருக்கமுதாம்...

**நாற்பதாயிரம்**
நலமொரெட்டுணையுங் கண்டிலேனிதை
நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்

**பரிசு பெறுகிறவர்கள்:**

1. டி. ராஜா, 9—ஏ, அமெரிக்கன் கல்லூரி ஹையர் செகண்டரி ஸ்கூல், தல்லாகுளம், மதுரை-2
2. வே. ஹேமமாலினி, 11ம் வகுப்பு, எஸ். எஸ். வி. மேல்நிலைப் பள்ளி கொடுமுடி-638.151
3. முருகபாரதி பகவத்சிங், எம்.ஏ., தமிழ்த்துறை, அரசு கலைக் கல்லூரி, திருவண்ணாமலை-606603
4. குமாரி இ. ஹேமலதா, பி.எஸ்ஸி., 32, முத்துமாரி தெரு (மாடி) சென்னை-600.001
5. ஜே. சௌம்ய நாராயணன், 19, வெள்ளாளத் தெரு, அயன்புரம், சென்னை-23
6. எஸ். முத்துலட்சுமி, நிர்வாக இயக்குநர் (construction) தென்னிந்திய ரயில்வே, அரசரடி, மதுரை
7. ஜி. பாலகிருஷ்ணன், ஆசிரியர், 7, தேவாரம் தெரு, சிறுப்பெரும்பாக்கம், விழுப்புரம், தெ. ஆ. மாவட்டம்
8. வி. ராம்பிரகாஷ், தோயம்பாளையம் (வழி) ஊதியூர்-638.710 பெரியார் மாவட்டம்
9. குமார் ஜே. கனகா, சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா, அடிசன் பில்டிங் கிளை, சென்னை-600.002
10. திருமதி சரோஜினி சுதந்திரம், 12, உப்பிலியார் வீதி நெ. 2, சிங்காநல்லூர், கோவை-5



# இயற்கை வைத்தியம்

**சில பத்திரிகைகளில் மருத்துவம் சம்பந்தப் பட்ட கேள்வி - பதில் பகுதி இடம் பெறு கின்றது. கல்கியில் அத்தகைய பகுதி இடம் பெறாத குறையைப் போக்க இதோ சில கேள்வி பதில்கள். பதிலளிப்பவர் இயற்கை வைத்தியர் எமனேஸ்வரன்**

**தூங்குமூஞ்சியான், படுக்கையூர்:**

கேள்வி: டாக்டர், எனக்கு இரவில் தூக்கம் வருவதில்லை. என்ன செய்யலாம்?

பதில்: பகலில் அலுவலகத்தில் தூங்குவதைக் குறைத்தால் இரவில் தூக்கம்வரும். எனவே அலுவலகத் தூக்கத்தைக் குறைக்கவும்.

**அசிங்கன், குளியானூர்:**

கேள்வி: டாக்டர், என் உடம்பில் ஒருவித துர்நாற்றம் வீசுகிறது. அதைப் போக்க நீங்கள்தான் வழி சொல்ல வேண்டும்.

பதில்: அண்மைக் காலமாகப் பலரைத் தாக்கும் நோய் உங்களையும் தாக்கி இருக்கிறது. இந்த வியாதிக்குச் சிகிச்சைச் செலவு மிக




அதிகம். இருந்தாலும் முயன்று பாருங்கள். 'தண்ணீர்' என்னும் அபூர்வமான திரவம் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அது எங்கு கிடைக்கிறது என விசாரித்து அதை வாங்கி, தலை முதல் பாதம் வரை ஊற்றி னால் வியாதி ஓரளவு குணமாகும்.

**லஞ்சப் பிரியன், மாமூல்நகர்:**

கேள்வி: டாக்டர்... என் உள்ளங்கை அடிக்கடி அரிக்கிறது. காரணம் என்ன?

பதில்: இந்த வியாதிக்குப் பெயர் மாமூல் மேனியா. ஏதேனும் ஒரு விஷயமாக உங்களை நாடி வருபவர்களின் சட்டைப் பையிலிருந்து சில கரன்சிகளை எடுத்து அரிக்கும் இடத்தில் தடவி, உங்கள் சட்டைப் பையில் வைத்துக் கொள்ள, வியாதி உடனே குணமாகும்.

**மொட்டையன், வழுக்கையூர்:**

கேள்வி: டாக்டர், என் தலை முடி உதிர்கிறது. என்ன செய்யலாம்?

பதில்: உதிர்ந்த முடியை என்ன செய்யலாம் என்பதற்கு டாக்டரைக் கேட்க வேண்டுமா என்ன? தயவு செய்து இதுபோன்ற கேள்வியை இனி தவிர்க்கவும்.




**மனைவிதாசன், உரலூர்:**

கேள்வி: என் வலது உள்ளங்கை தோளில் காய்ப்பு ஏற்பட்டுள்ளது. அதைப் போக்க வழி?

பதில்: உங்கள் மனைவியிடம் கெஞ்சிக் கூத்தாடி விரைவில் ஒரு கிரைண்டர் வாங்கவும். காய்ப்பு தானாக மறைந்துவிடும்.

**அப்பாவி, அகப்பைப்பட்டி:**

கேள்வி: என் கன்னம் திடீர் திடீரென்று வீங்கி விடுகிறது. என்ன சிகிச்சை?

பதில்: இதற்குச் சிகிச்சை தேவையில்லை. உங்கள் மனைவி சண்டைக்கு வரும்போது நீங்கள் சரண் அடைந்து விடுங்கள். கன்னம் வீங்காது. என் சொந்த அனுபவம்.

**கஞ்சனேஸ்வரன், சந்தேகபுரம்:**

கேள்வி: டாக்டர், ஆட்டோவிலோ, டாக்சியிலோ செல்லும்போது என் இதயம் மிக வேகமாகத் துடிக்கிறது. இதற்குக் காரணம் ஆட்டோவா, டாக்சியா அல்லது என் உடல்நிலையா?

பதில்: மூன்றும் இல்லை. இதயம் மிக வேகமாகத் துடிப்பதற்குக் காரணம் உங்கள் கண்களே. ஆட்டோ, டாக்சியில் செல்லும்போது, உங்கள் கண்கள் தொடர்ந்து மீட்டரையே பார்ப்பதால், மீட்டரின் வேகம் இதயத்தைத் தாக்கி அதை வேகமாகத் துடிக்கச் செய்கிறது. எனவே ஆட்டோ, டாக்சியில் செல்லும் முன்பு உங்கள் கண்களைக் கட்டிக் கொள்ளவும். அல்லது மீட்டர் மீது ஒரு துணியைப் போர்த்தி அதை மறைத்து விடவும்.

**-சிவகுமார்**




---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

## தனித்தன்மை வாய்ந்த
## இவரது தணியாத விருப்பம்
## 'ப்ளெயின்' ஷர்ட்டிங் மட்டும் அணிவதே

அதாவது மஃபத்லால் வழங்கும்
பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர்
ப்ளெண்டுகளின் ஷர்ட்டிங்.

அவருக்கென ஒரு தனி பாணி, தனி ரசனை.
பறைசாற்றமாட்டார், என்றும் பவ்வியமாக இருப்பார்.
தனக்கே உரிய தனித் தோற்றத்தை வலியுறுத்துவார்.

மஃபத்லால்
ஷர்ட்டிங்



MF-124-TAM